# கல்கி

KALKI 27.10.91 ரூ. 3.00
பொன்விழா ஆண்டு





## தீபாவளி வருகிறது; எண்ணெய்க்கெங்கே போகிறது?

# சோனியா அளித்த சோகம்!



**சோ**னியா காந்தி தேர்தலில் போட்டியிட மறுத்தது குறித்து, தமிழ் நாடு காங்கிரஸில் உள்ள சகல கோஷ்டிகளுக்கும் கொஞ்சம் வருத்தம் தான்; என்றாலும், இதனால் மிகவும் கவலையுற்று இருப்பவர்கள் வாழப்பாடி கோஷ்டியினர். அவர்களது கவலைக்கு முக்கிய காரணம், நரசிம்மராவின் கரம் வலுப்பெறும் என்பதும், அதன் காரணமாக பிரதமருக்கு வேண்டிய மூப்பனாரும் பலம் பெறுவார் என்பதுவே ம! ஆனால் மேலோட்டமாகப் பேசும் போது, இந்த விஷயத்தை மறைத்துப் பேசுகிறார்கள் அவர்கள்.

''எங்கள் கவலை இந்தக் குறுகிய வட்டத்தைப் பற்றியல்ல; நாங்கள் கவலைப் படுவது காங்கிரஸின் எதிர்காலத்தைப் பற்றித்தான். இன்று இந்தியாவை ஒன்று படுத்தக் கூடியது நேரு குடும்பம்தான். தேசத்துக் காக இரண்டு உயிர்களை விலை யாகத் தந்துள்ளது அந்தக் குடும்பம். தேசம் முழுதும் தெரிந்த தலைவர், ராஜீவ் காந்திக்குப் பிறகு சோனியாவாகத்தான் இருக்க முடியும்'' என்றார், சத்தியமூர்த்திபவன் பிரமுகர் ஒருவர்.

**சோ**னியா தேர்தலில் நிற்காதது குறித்து மூப்பனார் ஆதரவாளர்கள் வேறு விதமாகக் கருத்துத் தெரிவிக்கின்றனர்.

''வாழப்பாடியார், துரதிருஷ்டம் என்கிறார்; யாருக்கு துரதிருஷ்டம்? நேரு குடும்பத்தில் உள்ளவர்கள் ஒருவர் பின் ஒருவராக உயிரை விட, அந்த அனுதாபத்தில் பதவிக்கு வருவது சரிதானா? மேலும் இந்தக் கட்டத்தில் சோனியா அரசியலுக்கு வந்தால், இரண்டு அதிகார மையங்கள் உருவாகும். இதனால் தேசிய அளவில் கோஷ்டிகள் உண்டாகி, காங்கிரஸே பிளவுபடும். நரசிம்மராவ் போன்ற மூத்த தலைவர்கள் பல வருடங்கள் கட்சிப் பணியாற்றி விட்டு உயர்ந்த பதவிக்கு வந்திருக்கிறார்கள். திடீரென்று வந்தவர் அல்ல ராவ்.''

**எ**ந்த கோஷ்டியிலும் சேராத நடுநிலையாளர்கள் வேறு விதமான கருத்துக்களைத் தெரிவிக்கின்றனர்.

''தற்போது ராவ் அரசு ஒரு மைனாரிட்டி அரசுதான். என்றாலும் மற்ற கட்சிகளும் தற்போது தேர்தலைச் சந்திக்கத் தயங்குகிற சூழ்நிலையில் ராவ் அரசுக்கு அவ்வப்போது அவரது செயல்திட்டங் களுக்கு ஏற்ப ஏதேனும் ஓரிரு கட்சிகளிடமிருந்து ஆதரவு கிடைத்துக் கொண்டிருக்கிறது. இந்த நிலையில் சோனியா, எம். பி. ஆகி, பிரதமர் பதவிக்குப் போட்டியிடுவாரேயானால், மற்ற கட்சிகளின் ஆதரவு இந்த அளவுக்குக் கிடைக்கும் என்று யாரும் எதிர்பார்க்க முடியாது.''

**சோ**னியா அரசியலுக்கு வந்தாலும் சரி, வராவிட்டாலும் சரி, தமிழக காங்கிரஸில் கோஷ்டிப் பிரச்னை தீராது. மூக்கிருக்கும் வரை ஜலதோஷம் தான்!

– கௌசல்யா

"ஏன் ஸார் எல்லோரும் அவரைக் கட்டிப் பிடித்துவிட்டு வருகிறார்கள்?"

"அதுவா! எண்ணெய் விற்கிற விலையில் எல்லோரும் எண் ணெய் தேய்த்துக் குளிக்கவா முடியும்? அதனால் ஒருவர் தேய்த்துக் கொண்டதும், மற்றவர்கள் தங்க ளுக்கும் எண்ணெய் ஒட்டும் விதமாகக் கட்டிப் பிடித்துவிட்டு வருகிறார்கள்!"



# தீபாவளி வருகிறது: எண்ணெய்க்கெங்கே போகிறது?

இது ஏற்கெனவே பத்திரிகையில் வெளியான ஜோக்தானென்றாலும் இது கூட அவ்வளவு பொருத்தமாக இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். பல குடும் பங்களில் எண்ணெய் தேய்த்துக் கொள் வதை அப்படியே எல்லோரும் அடியோடு மறந்து விட்டார்கள். தீபாவளி திருநாளில் மட்டும் உச்சந் தலையில் ஒரு ஸ்பூன் வைத்துக் கொள்வதுடன் சரி.

போன வருட தீபாவளியிலிருந்து இன்று வரை பார்த்தால், சமையல் எண்ணெயின் விலை நாற்பது சதம் ஏறி இருக்கிறது. பல நடுத்தரக் குடும்பங்களின் காமதேனு வாக விளங்கி வந்த பாமாயிலும் இப் போது, அந்நியச் செலாவணிப் பற்றாக் குறையால் இறக்குமதி செய்யப்படுவது நிறுத்தப்பட்டு விட்டது. (இனி இறக்குமதி செய்யப்படும் என்று மத்திய உணவுத் துறை . இணையமைச்சர் சொல்லியிருந் தாலும் எப்போது என்று சொல்லவில்லை!)

சமையல் எண்ணெய் ஏன் விலையேறு கிறது? எங்கே கோளாறு?

1985ல் ராஜீவ் காந்தியின் ஆட்சியின் போது, சாம் பிட்ரோடா தலைமையில் ஒரு குழு ஐந்து முக்கிய அம்சங்களைச் செயல் படுத்தும் முயற்சிகளை மேற்கொண்டது. கிராமங்களுக்குக் குடிநீர் வசதி, தகவல் தொடர்பு முன்னேற்றம், மற்றும் சமையல் எண்ணெய் உற்பத்தியில் தன்னிறைவு என்ற நோக்கில் சில திட்டங்கள் போடப்பட்டன. எண்ணெய் வித்துக்களுக்கான விவசாய நிலப்பரப்பு அதிகரிக்கப்பட்டது. விவசாயி களுக்கு அதிக அளவில் விதைகள் கொடுக் கப்பட்டன. இருந்தும் நம்மால் தன்னிறவு அடைய முடியவில்லை.

இதற்கு முக்கியமான காரணம், அவ் வப்போது வறட்சியால் உற்பத்தி குறைந் ததுதான். இடை இடையே ஏராளமான மகசூல் கிடைத்த காலத்தில், உள் நாட்டுத் தேவைக்கு எள்ளைப் பயன்படுத்தாமல், வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்ய அரசு அனுமதித்தது. அதேசமயம், லட்சக்கணக் கான டன் சமையல் எண்ணெயை (பாமா யில்) இறக்குமதியும் செய்தது. இம் மாதிரி

யான அரசின் தாறுமாறான கொள்கையால் 1990ம் வருடம் எண்ணெய் விலை பயங்கர மாக ஏறிற்று. போதாததற்கு ஏராளமான பதுக்கலும் நடந்தது. இதைக் கண்டு பிடிக்க எந்தவிதமான தீவிர நடவடிக்கையும் எடுக்கவில்லை. நிலைமை இன்னும் மோச மாகும் விதத்தில் பாமாயில் இறக்குமதியும் நிறுத்தப்பட்டு விட்டது. இந்த ஆண்டு எண்ணெய் வித்துக்களின் உற்பத்தி முன் னெப்போதையும் விட, அனைத்திந்திய அளவில் அதிகரித்தும் கூட இன்னும் தன்னி றைவு காணும் அளவில் முன்னேற வில்லை. இதனாலெல்லாம்தான் எண் ணெய் விலை இன்னமும் ஏறிக் கொண்டே இருக்கிறது.

தமிழ்நாட்டைப் பொறுத்தவரை கிட்டத்தட்ட இரண்டரை லட்சம் ஏக்கரில் எள்ளும், 25 லட்சம் ஏக்கரில், மணிலாவும் பயிரிடப்படுகின்றன. ஆனால் இதன் மூலம் வரும் உற்பத்தி, தமிழ்நாட்டின் தேவைக்குப் போதுமானதல்ல. ''தமிழ் நாட்டிலுள்ள சில முக்கியமான எண்ணெய் உற்பத்தியாளர்கள், எண்ணெய் வித்துக்கள் ஏராளமாகக் கிடைக்கும் சமயங்களில் எக்கச்சக்கமாக வாங்கிப் பதுக்குகிறார்கள்.



☛ திருமதி பிரதீபா பிரபு

இதனால் பெரும்பாலோர் ஆந்திராவுக்கும் கர்நாடகத்துக்கும் எள்ளைத் தேடி ஓட வேண்டி இருக்கிறது. உற்பத்திச் செலவும் உயருகிறது. இதன் காரணமாக எங்களைப் போன்று செக்கு வைத்து எண்ணெய் ஆட்டுவோர் நிலை மிகவும் மோசமாக இருக்கிறது'' என்கிறார், பரம்பரை பரம் பரையாக இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக் கும் ஜோதி.

இந்தச் சூழ்நிலையில் சென்ற மாதம் தமிழக அரசு, 'தீபாவளிக்குக் கட்டாயம் பாமாயில் வழங்குவோம்' என்று கூறியது. ஆனால் அதற்கான அறிகுறிகளைக் கூடக் காணவில்லை. அதற்கான முயற்சிகள் என்னவாயிற்று? என்று மாநில அதிகாரி களிடம் கேட்டால் வாயை மூடிக் கொள்கி றார்கள். தமிழகத்திற்கு மாதம் ஒன்றுக்கு 13,000 டன் பாமாயில் கொடுத்தால்தான் கட்டுப்படியாகும். மத்திய அரசு கடைசி யாக தமிழகத்திற்குக் கொடுத்த அளவு வெறும் 3,000 டன்னாகக் குறைந்து, இப் போது அதுவும் இல்லை என்றாகி விட்டது. ''நாங்களே இறக்குமதி செய்து கொள் கிறோம்'' என்று மத்திய அரசுக்கு முதல்வர்



☛ ஜோதி

கடிதம் எழுத, ''இப்போதுள்ள பொரு ளாதார நெருக்கடியில் அதெல்லாம் முடி யாது''"என்று மத்திய அரசு மறுத்து விட்ட தாம்.

இப்போது பாமாயில் இறக்குமதிக்கு ஒரு புதுத் திட்டம் வகுத்துள்ளது மத்திய அரசு. அதன்படி எந்த ஒரு மாநில அர சாவது, பாமாயிலை இறக்குமதி செய்ய விரும்பினால், இறக்குமதி செய்யப்படும் எண்ணெயின் மதிப்புக்குத் தங்கள் மாநி லத்திலிருந்து ஏதாவது ஒரு பொருளை, எஸ். டி. சி. மூலமாக ஏற்றுமதி செய்து, அந்நியச் செலாவணி சம்பாதிக்க வேண் டும். அப்படிச் செய்வதாக இருந்தால் அந்த மாநில அரசுக்குப் பாமாயில் இறக்குமதி செய்ய மத்திய அரசு அனுமதி தரத் தயாராக இருக்கிறதாம்.

மத்திய அரசின் இந்தப் புதிய திட்டப்படி குஜராத் அரசு, 30,000 டன், சோடா ஆஷை வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்து பாமா யில் இறக்குமதிக்கான அனுமதிக்குக் காத் திருக்கிறதாம். இந்தச் செய்தியை தமிழக அரசுக்குச் சொன்ன மத்திய அதிகாரிகள், 'நீங்களும் இதுபோன்று செய்யலாமே?' எனக் கேட்டிருக்கிறார்கள். 'நாம் என்ன

ஏற்றுமதி செய்யலாம்' என்று இப்போது மூளையைக் கசக்கிக் கொண்டிருக்கிறார்கள் தமிழக அதிகாரிகள்.

''இப்படியெல்லாம் அவஸ்தைப்பட வேண்டாம்'' என்கிறார் விவரம் தெரிந்த ஒரு அதிகாரி. ''தமிழ்நாட்டில் தவிட்டு எண்ணெய் உற்பத்தி செய்ய நிறைய வாய்ப்பு இருக்கிறது. அதற்கு முறையாகத் த வி ட் டை ச் சேமித்தோமேயானால் போதும். அந்தப் பணியை யாரும் செய்ய மாட்டேன் என்றார்களே'' என்று வருத்தப் படுகிறார் அவர்.

நமது மாநில விவசாய அமைச்சரோ ''250 ஏக்கரில், செம்பனை (Palm trees) வளர்க்கும் திட்டம் பரிசீலனையில் இருக் கிறது. இந்தச் சோதனை முயற்சி பயனளிக்கு மேயானால், பாமாயிலைத் தமிழ் நாட்டி லேயே உற்பத்தி செய்து கொள்ளலாம்'' என்று சட்டசபையில் கூறியிருக்கிறார். சோதனை வெற்றியடைந்து, பரந்த அள வில் மரங்களை வளர்த்து, எப்போது பாமா யில் கிடைக்குமோ! அதுவரை, ஏறும் எண் ணெய் விலையை யார் வந்து தடுத்து நிறுத்தப் போகிறார்களோ தெரியவில்லை.

''நல்லெண்ணெய், கடலெண்ணெய் போன்ற பாரம்பரிய எண்ணெய் வகை களை உபயோகிப்பதை மாற்றிக் கடுகெண் ணெய், சூரியகாந்தி எண்ணெய், சோயா பீன்ஸ் எண்ணெய் போன்றவற்றை மக்கள் பயன்படுத்த முன்வர வேண்டும். அப் போது எண்ணெய் விலை இந்த வேகத்தில் உயராது'' என்கிறார் அதிகாரி ஒருவர்.

அது சரி, இவைகள் மட்டும் சல்லிசாகக் கிடைக்கிறதா என்ன?

இந்தச் சூழ்நிலையில், ''எண்ணெய் வாங்கிப் பயன்படுத்தித்தான் ஆக வேண் டுமா? எண்ணெய் இல்லாமல் சமையலே செய்ய முடியாதா? என்று சத்துணவு மற் றும் உணவியல் நிபுணர் திருமதி ஆர். பிரதீபா பிரபுவிடம் கேட்டோம்.

''சுவையான சமையல் என்று வந்து விட்டால் எண்ணெய் இல்லாமல் ஒன்றும் செய்ய முடியாது. அளவை வேண்டுமா னால் குறைத்துக் கொள்ளலாம், அவ்வளவு தான்!'' என்கிறார் அவர்.

''தீபாவளியின் போது, நிறைய எண் ணெய் செலவாகாமல் என்னென்ன இனிப்பு, கார வகைகளைத் தயாரிக்க லாம்?''

''இனிப்பைப் பொறுத்தமட்டில், ரவா லட்டு, பாசிப் பயறு லட்டு, எள்ளு ருண்டை, கடலை மாவு போளி ஆகியவற் றைத் தயாரிக்கலாம். இவற்றுக்கு அதிக அளவு நெய்யோ, வனஸ்பதியோ, அல்லது எண்ணெயோ தேவையில்லை. அதே போல் முறுக்கு, ரிப்பன் பக்கோடா போன்ற கார வகைகளைச் செய்யலாம். இவற்றுக்கும் அதிக எண்ணெய் செலவா காது.''

நமது உடலுக்குத் தேவையான கொழுப் புச் சத்து தினசரி 25 கிராம் அளவில்தான். இது எண்ணெய் மூலமாக மட்டும்தான் கிடைக்கிறது என்பதில்லை. வேறு பொருள்களை உண்ணும் போதும் பெரும் அளவில் கிடைத்து விடுகிறது. எனவே எண்ணெய் குறைத்துச் சமையல் செய்வ தால் தேக ஆரோக்கியம் ஒன்றும் பாதிக் கப்படாது. ஆனால் ருசி என்று ஒன்று இருக் கிறதல்லவா?

எனவே தீபாவளி போன்ற முக்கிய தினங்களையொட்டியாவது நியாய விலை யில் அரசு எண்ணெய் தாராளமாகக் கிடைக் கச் செய்யலாம். இல்லையெனில் எண் ணெய்த் தட்டுப்பாட்டுடன் மக்களின் மகிழ்ச்சித் தட்டுப்பாடும் சேர்ந்து கொள் ளும். மகிழ்ச்சியின்றிப் பண்டிகையைக் கொண்டாடி என்ன பயன்?

- ப்ரியன்

படம் : ராஜன்

அட்டை வண்ணப்படம் : யோகா



''ஒருவழியா இந்தத் தீபாவளிச் செலவைச் சமாளிச்சுடுவேன்.''

''ஆபீசில் ஏதாவது 'லோன்' போட்டியா?''

''இல்லே! லோன் போட்டவரிடம் கடன் கேட்டிருக்கிறேன்!''

- நல்லாலம் காசிதாசன்

# தேவேந்திரா சாரீஸ்

**மிக மிக உயர்ந்த பட்டும், நூலும் கலந்து தயாரிக்கப்பட்டது.**

**H.O. 27, ஏலா கந்தப்பன் தெரு, சென்னை - 3, போன் : 583213.**

**கிளை ஷோ-ரூம் கடை எண் : 7, ராம்ஸ் பஜார் (பனகல் பார்க் எதிரில்)**

**தியாகராய நகர், சென்னை - 17. போன் : 443367**

**தேவேந்திரா புடைவைகள் கிடைக்கும் இடங்கள் :**

★ காமாட்சி சில்க் ஹவுஸ், 5/38, W.E.A. அஜ்மல்கான் ரோடு, கரோல்பாக், புதுடில்லி - 110 005. போன்: 581050, 561786; ★ மதராஸ் டெக்ஸ்டைல்ஸ், 4/41, சரஸ்வதி மார்க், W.E.A. கரோல்பாக், புதுடில்லி - 110 005; ★ காஞ்சிபுரம் சில்க் ஹவுஸ் (சவுத் எண்டு) 9ஏ/40, W.E.A. கரோல்பாக், புதுடில்லி. போன்: 5723981; ★ பங்கஜம் சுந்தரராஜன், C6/A.D.D.A. Flats, முனிர்கா, புதுடில்லி - 67; ★ நல்லீஸ் சில்க் சாரீஸ் சென்டர், 401, டெலாங் ரோடு, மாதுங்கா, பம்பாய் - 19; ★ சோலங்கி கிளாத் ஸ்டோர்ஸ், 7, பிவந்திவாலா பில்டிங், எல்.என். ரோடு, மாதுங்கா, பம்பாய் - 400 019; ★ லதா கிருஷ்ணன், பிளாட் நெ.20, காமதேனு கோ.ஆப். பெஸ்டம்சாகர், செம்பூர், பம்பாய் - 89 (கிளாஸ் பாக்டரி அருகில்); ★ ஜெயஸ்ரீ, 2-ஏ, தேசப்பிரியா பார்க் ரோடு, கல்கத்தா - 26; ★ திருமதி டி.எஸ். சகுந்தலா சீனிவாசன், 18/1-ஏ, லால்பாக் போர்ட் ரோடு, (மினர்வா அண்டு பலப்பா சர்க்கிள் மத்தியில்) பெங்களூர். போன்: 224357; 96/1, கிழக்கு பார்க் ரோடு (மல்லேஸ்வரம் போஸ்ட் ஆபீஸ் அடுத்து) பெங்களூர் - 560 003; ★ திருமதி துர்க்கம்பாள், 22, சேஷபுரம், தென்னூர், திருச்சி - 620 017; ★ திரு எஸ். சேதுராமன், 50/பி, பாணாதுரை தெற்கு வீதி, கும்பகோணம். போன்: 20972; ★ திருமதி எஸ். லட்சுமி, 24, சீனிவாசா தெரு, சேலம் - 1 (ரயில்வே ஸ்டேஷன் அருகில்) ★ ரங்காச்சாரி கிளாத் ஸ்டோர்ஸ், 123, சென்குப்தா தெரு, கோயம்புத்தூர் - 9; ★ ஸ்ரீமுருகன் கிளாத் ஸ்டோர், 3, ஆரோக்கியசாமி ரோடு கிழக்கு, ஆர்.எஸ். புரம், கோவை - 2; ★ மஹாராஜா சில்க்ஸ், 76, உடுமலை ரோடு, பொள்ளாச்சி - 1. போன்: 4191; ★ மகாலட்சுமி சில்க் சென்டர், நீள் பில்டிங் (உள்புறம்), 175/11, மேல வீதி, சிதம்பரம்; ★ ஹேமாவதி ஏஜென்சிஸ், 2711, நாணயக்கார செட்டித் தெரு, தஞ்சாவூர்; ★ பாகீரதி மூர்த்தி, 100, ஸ்ரீவராஹபுரம் தெரு, கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலி; ★ எல். ஆர். பகவதி, 15, பள்ளத்தெரு, வடிவீஸ்வரம், நாகர்கோவில்; ★ கே.என். கிட்டப்பா, 61, யானைக்கட்டித் தெரு, சின்ன காஞ்சிபுரம்; ★ திருமதி கே. சீதாலட்சுமி, 41, 4-வது ட்ரஸ்ட் கிராஸ் தெரு, மந்தவெளிப்பாக்கம், சென்னை - 28. போன்: 73244; ★ திருமதி சாவித்திரி பால சுப்பிரமணியம், 2, 7-வது தெரு, நங்கநல்லூர், சென்னை - 61. (பிள்ளையார் கோயில் அருகில்) போன்: 2343737; ★ சரோஜா கிருஷ்ணமூர்த்தி, ஏபி. 1186, 4-வது தெரு, தென்றல் காலனி, (பி.டி.சி. டிப்போ எதிரில்) அண்ணாநகர், சென்னை - 600 040; ★ பாலாஜி கிளாத் சென்டர், 22-ஏ, கக்கன் தெரு, (வித்யா தியேட்டர் எதிரில்) மேற்கு தாம்பரம், சென்னை - 45; ★ திருமதி. சுலோசனா கோவிந்த், 2, எம்.ஐ.டி. லெவல் கிராஸிங், குரோம்பேட்டை, சென்னை - 44; ★ கலா மோகன், 115, ராகவாச்சாரி தெரு, பெரம்பூர், சென்னை - 11. போன்: 675483; ★ எஸ். பொன்னப்பன், 8.3.282, 2-வது பஜார், செகந்திராபாத் (ஆபி). போன்: 69562; ★ ராணி சாரீஸ், ராணிவி. சுந்தர்ராவ், 13, மஹால் 4-வது தெரு, (திருமலை நாயகர் மஹால் பின்புறம்), மதுரை - 625 001. போன்: 26295; ★ ஆர். கிருஷ்ணமூர்த்தி, பெரிய கண்ணாரத் தெரு, மயிலாடுதுறை; ★ திருமதி கமலா நாகஸ்வாமி, 52, சரஸ்வதி நகர், கடலூர். போன்: 112; ★ திருமதி பிரேமா குருராஜன், 1, எஸ். லக்ஷ்மி நிலையம், அரசினர் ஆசிரியர் பயிற்சி பள்ளி அருகில், தருமபுரி - 636 701; ★ எஸ். உமாராணி, 132, செட்டித் தெரு, பாண்டிச்சேரி.

**குறிப்பு : மற்ற இடங்களில் வாங்குவது எங்களுடைய தயாரிப்பு அல்ல.**



மக்கள் நன்மைக்காக
மக்களால் நடத்தப்படும்
மக்கள் இயக்கம்
கூட்டுறவு.

செல்வி **ஜெ. ஜெயலலிதா**
மாண்புமிகு தமிழக முதல்வர்

---



மாண்புமிகு புரட்சித் தலைவி அவர்களின் அரசு கூட்டுறவு இயக்கத்தின் மூலம் உங்களுக்காகக் குறைந்த விலையில் தரமான பொருட்களை தீபாவளிக்காகத் தர முன் வருகிறது. அருள்கூர்ந்து ஆதரிப்பீர்.

**க. இராசாராம்**
மாண்புமிகு உணவு மற்றும் கூட்டுறவு அமைச்சர்.

# கூட்டுறவுச் சிறப்பங்காடிகள் இல்லத்தரசிகளின் இனிய கனவு

## இல்லத்திற்குத் தேவையான அனைத்துப் பொருட்களையும் ஒரே இடத்தில் பெறலாம்.

கூட்டுறவுச் சிறப்பங்காடிகளில்

- தரமான பொருட்கள்
- நியாயமான விலையில்
- சரியான எடையளவில்

கிடைக்கும்

கண்ணைக் கவரும் துணிவகைகளும் அழகு சாதனங்களும் உண்டு.

மகிழ்ச்சியாகத் தீபாவளியைக் கொண்டாட பட்டாசு ரகங்களும் உண்டு.

**கூட்டுறவுச் சிறப்பங்காடிகளில் பொருட்களை வாங்கி குதூகலமாகத் தீபாவளியைக் கொண்டாடுங்கள்.**





**தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம்**
சென்னை-600 010.

MAC - 1313



# ஏ.சி. வசதியுடன் தேவிலாலின் மாட்டுக் கொட்டகை

**தா**வு (பெரியப்பா) என்று அழைக்கப்படும் தேவிலாலின் லீலைகளைப் பற்றி எவ்வளவு வேண்டுமானாலும் எழுதலாம். பிரசிடண்ட்ஸ் எஸ்டேட்ஸ் என்று சொல்லப்படுகிற ராஷ்ட்ரபதி மாளிகையை ஒட்டிய பகுதியிலுள்ள பங்களாவை உதவிப் பிரதமர் பதவியிலிருக்கும் போது இவருக்குக் கொடுத்திருந்தார்கள். இப்போது பதவிபோனாலும் அரசு வீட்டைக் காலி செய்ய மறுக்கிறார். நிறைய ஏர்கண்டிஷனர்களை வாங்கி மாட்டுக் கொட்டகையில் பொருத்தியிருக்கிறார். ஏனென்று அரசு கேட்டதற்கு ''குளிர்படுத்தப்பட்ட சீதோஷ்ணத்தில் மாடுகளின் பால்வளம் எப்படி அதிகரிக்கிறதென்ற ஆராய்ச்சிக்காக'' என்கிறார்!

## தூர்தர்ஷனுக்கு ஆபத்து !

**மா**ஸ்கோ நகரத் தெருவில் தடதடத்து வரும் பீரங்கி வண்டியை வழிமறித்து நிறுத்தி, அதன்மேலே ஏறிநின்று, போரிஸ் யெல்ட்ஸின் கம்யூனிசப் பழமைவாதிகளின் தகாப்புரட்சியை எதிர்க்குமாறு மக்களுக்கு அறைகூவல் விடுத்ததை அதே நேரத்தில் ஆயிரக் கணக்கான தில்லி வாசிகள் தமது டீ.வி.யில் பார்த்தனர். விளையாட்டு விரும்பிகளோ யூ. எஸ். ஓபன் டென்னிஸ் ஆட்டத்தை முதல் ரவுண்டிலிருந்து பார்த்துத் தீர்த்தார்கள். எல்லாம் டிஷ் ஆன்டனாவும் கேபிள் டீ.வி.யும் செய்யும் விந்தை.

விரைவிலேயே B.B.C. யின் இந்திய ஒளிபரப்பும் துவங்கவிருக்கிறது. ''இருபத்து நான்கு மணிநேரமும், எல்லா நாட்களும் ஆறு சானல்களிலும் இடைவிடா நிகழ்ச்சிகள்'' என்கிறது சமீபத்திய விளம்பரம். குழந்தைகளுக்குக் கார்ட்டூன் படங்களும், தவிர ஹிந்தி ஆங்கிலப் படங்களும் கேபிள் டீ.வியில் அடக்கம்.

தனக்கு இதனாலெல்லாம் வந்திருக்கும் ஆபத்தைப்பற்றி தூர்தர்ஷன் இன்னும் யோசிக்கத் தொடங்கியதாய்த் தெரியவில்லை. ஆனால் வி.சி.ஆர் (டெக்) மற்றும் காசெட் வாடகைக்கு விடும் வியாபாரங்களுக்குப் பலத்த அடி. தில்லியில் இப்போது நிறையப் பேர் வீட்டிலிருக்கும் டெக்குகளை விற்கத் தொடங்கிவிட்டனர்.

## ஐந்து நட்சத்திர நாடகம்!

**ஒ**ரு மனோகரமான முன்னிரவுப் பொழுதில் தில்லியிலிருக்கும் தாஜ் பாலஸ் ஹோட்டலின் காஃபி ஷாப்பில் நீங்கள் நுழையும் போது நாடகம் நடந்து கொண்டிருந்தால் ஆச்சரியப்படாதீர்கள். 'Supper Theatre' முதன் முதலாக இந்தியாவில் அறிமுகப்படுத்தப்பட்டிருக்கிறது.

ஆனால் அப்படியொன்றும் நீங்கள் நாடக நேரத்தில் நுழைந்துவிட முடியாது. ரூ. 175 கொடுத்து முன்பதிவு செய்து கொள்ள வேண்டும். அதற்கே போட்டா போட்டி. இந்தப்பணத்தில் நாடகமும் காண்பித்து அதைத் தொடர்ந்து இரவுணவும் வழங்கப் பட்டுவிடுகிறதாம்.

தமது வழுக்கைத் தலையால் அனைவரையும் கவர்ந்த ஹிந்தி நடிகர் அனுபம் கேரின் மனைவி கிரண் கேர், முதல் நாடகமான 'கொலை விளையாட்'டில் நடித்தார். பம்பாயின் முன்னணி டைரக்டர்களான அமல் அல்லண்ணா, பைசல் அல்காஜி போன்றோர் இது ஒரு புதிய முயற்சி என்று சொல்லித் துவக்க கால நாடகங்களை இயக்கினர்.

''நாடகம் என்பது சமுதாய மாறுதலுக்கான ஒரு சாதனம். அதை ஐந்து நட்சத்திர ஹோட்டலில் அரங்கேற்றுவது அபத்தம்'' என்கிறார் பிரபல நாடக இயக்குநர் ஹபீப் தன்வீர்.

''ஏன், குறுந்தாடியும் ஜோல்னாப் பையும் வாரறுந்த கோலாப்பூரிச் சப்பல்களும் உள்ளவர்தாம் நாடகம் பார்க்க வேண்டுமென்று எங்கே எழுதி வைத்திருக்கிறது?'' என்று மறுகேள்வி கேட்கிறார் அமல் அல்லண்ணா.

- இமயவரம்பன்



☛ அமெரிக்கா செல்லும் டிஷ் ஆன்டென்னா தயாரிப்பில்

# 24 மணி நேரமும் டீவி!

சினிமா நடிகர் மம்முட்டி, தமது கற்பகம் கார்டன்ஸ் வீட்டில் பிரம்மாண்டமான டிஷ் ஆன்டென்னா பொருத்தியிருக்கிறார் - மூன்று லட்ச ரூபாய் செலவில். சென்னை நகரின் பல அடுக்கு மாடிக் குடியிருப்புகளிலும் புதிதாக, வானத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டு பிரம்மாண்ட டிஷ் ஆன்டென்னாக்கள் காணப்படுகின்றன.

கேட்டால், மூன்று சானல்களில் 24 மணி நேரமும் டீவியில் நிகழ்ச்சிகள் பார்க்கலாம் என்கிறார்கள்! ஒன்றில் நாடகம், சினிமா என்று எண்டர்டெயின்மெண்ட். இரண்டாவதில் ஸ்போர்ட்ஸ்; மூன்றாவதில் இசை.

என்ன என்ன நாடுகளின் நிகழ்ச்சிகள் தெரியும்? சீனா, மாஸ்கோ, சௌதி, ஓமான், பர்மா என்று ஒரு பட்டியலே கிடைத்தது.

''கேபிள் டீவிக்கும் டிஷ் ஆன்டென்னாவுக்கும் என்ன வித்தியாசம்?''

''கேபிள் டீவி என்பது வி. சி. ஆரில் வீடியோ படம் பார்ப்பது போன்றதுதான். கேபிள் மூலம் டீவி இணைக்கப்பட்டு, வீடியோ காசெட்டுகளைக் காண்பிக்கிறது தான் கேபிள் டீவி. டிஷ் ஆன்டென்னா அப்படி அல்ல. சாடிலைட் மூலம் அயல் நாடுகளின் டீவி நிகழ்ச்சிகளைக் காண நிறுவப்படுவதுதான் டிஷ் ஆன்டென்னா'' என்றார் டிஷ் ஆன்டென்னாவை, முதல் முதலாக இந்தியாவில் தயாரிக்கும் லைசென்ஸ் பெற்ற சிவிகான் வேல்வி கார்ப்பரேஷனின் தொழில்நுட்ப இயக்குனரான இளைஞர் முகமது சலாஹுதீன்.

''சரி. பல மாடிக் கட்டடங்களில் குடியிருப்பவர்கள் ஒன்று சேர்ந்து ஒரு டிஷ் ஆன்டென்னா நிறுவுகிறார்கள் என்று வைத்துக் கொள்ளுவோம். ஒரே சமயத்தில், ஒவ்வொரு குடித்தனக்காரருக்கும் ஒவ்வொரு சானல் பார்க்க வேண்டும் என்றால் இது எப்படி சாத்தியம்?''

''தனி வீடு என்றால் ஒரு சாடிலைட் ரிசீவர் போதும். இது டிஷ் ஆன்டென்னாவுடன் கொடுக்கப்படுகிறது. அடுக்கு மாடிக் குடியிருப்புகளில் நிறுவும் போது, மூன்று சாடிலைட் ரிசீவர்கள் கொடுக்கிறோம். இது தவிர, ஸ்பிளிட்டர், சானல் மிக்ஸர் உபகரணங்களும் உண்டு. டிஷ் ஆன்டென்னாவிலிருந்து ஸ்ப்ளிட்டருக்கு; ஸ்ப்ளிட்டரிலிருந்து, ரிசீவர்களுக்கு; ரிசீவர்களிலிருந்து 'சானல் மிக்ஸ'ருக்கு என்று இணைப்புக் கொடுத்து விட்டால், யார் எந்த சானலில் வேண்டுமானாலும் பார்த்துக் கொள்ளலாம். இந்த மூன்று சானல்களும் ஹாங்காங்கிலிருந்து ஒளிபரப்பப்படுகிறது. இருபத்து நாலு மணி நேரமும்!''

''ரஷ்யா, சீனா, மலேஷியா, சௌதி

அராபியா எல்லாம் பார்க்கிறார்களே, எப்படி?''

''சற்று வித்தியாசமான ஆன்டென்னா கூடுதலாகப் பொருத்தி விட்டால் போதும். டிஷ் ஆன்டென்னாவின் திசையையும் மாற்றிக் கொள்ள வேண்டும்.''

இதுவரை இந்தியாவில் மட்டும் சுமார் அறுநூறுக்கு மேற்பட்ட டிஷ் ஆன்டென்னாக்களை நிறுவியிருக்கும் சிலிகான் வேல்லி கார்ப்பரேஷன், சென்னையில் மட்டும் அறுபதுக்கும் மேற்பட்ட டிஷ் ஆன்டென்னாக்களை வைத்திருக்கிறது. ஒரு நாளைக்கு மூன்று ஆன்டென்னாக்கள் வீதம் தயாராகிறது இங்கே. அமெரிக்காவுக்கே இங்கிருந்து தயாரித்து அனுப்புகிறார்!

''தனியார் வீடுகள் தவிர வேறு எங்கு எல்லாம் நிறுவியிருக்கிறீர்கள்?''

''பாதுகாப்பு அமைச்சகம், இந்திய விண்வெளி ஆராய்ச்சி நிலையம், பி. ஹெச். ஈ. எல்., எம். ஆர். எல்...''

பட்டியல் நீளுகிறது.

66,000 ரூபாய்க்கு டிஷ் ஆன்டென்னா பொருத்தி விட்டு, சுமார் நூறு வீடுகளுக்கு இணைப்புக் கொடுத்து மாதா மாதம் சந்தா வசூலிக்கிறார்கள் அண்ணா நகரில். முதலில் ஒவ்வொரு வீட்டிலிருந்தும் 750 ரூபாய் வசூலித்து, பிறகு மாதம் 75 ரூபாய் சந்தாவாக வசூலித்து வருகிறார்கள்.

''இப்படி, வேலையில்லாப் பிரச்னை விலும் ஓர் அளவுக்குத் தீர்வு காண முடியும்'' என்கிறார் சலாஹுதீன்.

டிஷ் ஆன்டென்னா நிறுவ, தகவல் தொடர்பு அமைச்சகத்தின் லைசென்ஸ் பெற வேண்டும். இந்தப் பொறுப்பையும் நிறுவனமே ஏற்றுக் கொள்ளுகிறது.

''ஸ்டார் டீவி நிகழ்ச்சிகளில் 'A' சமாசாரம் எதுவும் வராதா? நம் கலாசாரத்துக்கு ஏற்புடையது அல்லாத நிகழ்ச்சிகள் ஒளி பரப்பப்படாதா?''

''வாய்ப்பே இல்லை!'' என்கிறார் சலாஹுதீன். ''ஸ்டார் டீவியின் வைஸ்-பிரசிடென்ட் டேவிட் மேனியன் மூன்று மாதங்களுக்கு முன்பு இங்கே வந்திருந்தார். அப்போது நடந்த கருத்தரங்கில் அவர் பங்கேற்று, அம் மாதிரி நிகழ்ச்சிகளை ஒளி பரப்ப மாட்டோம் என்று உறுதி அளித்திருக்கிறார்.''

ஸ்டார் டீவி நிகழ்ச்சிகள் தவிர, பிபிஸி நிகழ்ச்சிகளும் ஒளிபரப்பாகப் போகிறது. டீவியில் இவற்றைப் பார்த்த போது வெகு துல்லியமாக இருந்தது. தரத்திலும், நிகழ்ச்சித் தயாரிப்பிலும் நம்மவர்கள் முன்னேற மேற்படி நிகழ்ச்சிகள் ஒரு தூண்டுகோலாயிருக்கும் என்கிறார் சலாஹுதீன்.

''நம்முடைய 'இன்சாட்' மாதிரி ஏதாவும் ஒரு சாடிலைட் வழியாகத்தானே இந் நிகழ்ச்சிகள் வருகின்றன?''

''ஆமாம். ஸ்டார் டீவி 'ஏஷியாசாட்' வழியாக வருகிறது. அது தனியார் நிறுவனம்! ஹாங்காங்கிலுள்ள ஹட்ச்விஷன் நிறுவனத்துக்குச் சொந்தமானது.''

''அப்படியானால் நாம் அவர்களுக்கு ராயல்டி தொகை என்று கொட்டிக் கொடுக்க வேண்டியிருக்குமே?''

''அதுதான் இல்லை. ஒரு நயா பைசா கூடக் கிடையாது.''

''அப்படியானால் அவர்களுக்கு வருமானம்?''

''வருமானமா! விளம்பரங்கள் கோடி கோடி டாலர்களை வசூலித்துக் கொடுக்கும் போது, வருமானத்துக்கு என்ன குறைச்சல்?''

– சித்தார்த்

❑ ''நஸ்ருதீன், உங்கள் வாழ்க்கையின் வெற்றி ரகசியத்தைச் சொல்லுங்களேன்!''

இப்படி நஸ்ருதீனின் நண்பர் ஒருவர் கேட்டார்.

''நான் உனக்குச் சொன்னால் நீ அதை யாரிடமும் சொல்ல மாட்டாயே?''

''சொல்ல மாட்டேன்.''

''எந்தச் சந்தர்ப்பத்திலும்...?''

''சொல்ல மாட்டேன்.''

''என்ன லாபம் கிடைத்தாலும்...?''

''சொ...ல்...ல...வே மாட்டேன்; நம்புங்கள்!''

''நண்பா ஒரு ரகசியத்தைக் காப்பாற்றும் சக்தி உனக்கிருப்பது போல் எனக்கும் இருக்கிறது. நானும் என் ரகசியத்தை யாருக்கும் எந்தச் சந்தர்ப்பத்திலும் சொல்ல மாட்டேன்!''

– முல்லா நஸ்ருதீன் கதைகளிலிருந்து – ஆ. வளையாபதி




வாழப்பாடி ராமமூர்த்தி
ஜெ. அரசுக்கு ஆதரவு
பஸ் கட்டண உயர்வுக்கு எதிர்ப்பு


ஐயா, சோனியாகிட்ட பேசிட்டேனே தேர்தல்ல நிக்க மாட்டேன்னு சொல்லிட் டாங்க...
நரசிம்மராவ்


ஒரு வருஷம் துக்கம்... இனி அரசியல் பிரவேசம்!
சோனியா ஆதரவாளர்


சினிமாவில சும்மனாங்காச்சும் மோதினீங்க...
தி.மு.க.
சத்ருகன் சின்ஹா


ராஜேஷ் கன்னா


...இப்பத்தான்யா ரியல் ஃபைட்டு... ம், அடிச்சுக்-குங்க!
இ. காங்கிரஸ்

# நோயுற்ற ஆஸ்பத்திரிகள்!

மத்திய சுகாதாரத் துறை அமைச்சர் ஃபொதே தார் வெளிப்படையாகப் பேசுபவர் என்று புகழ்பெற்றவர். உதாரணமாக, "டில்லி சப்தர்ஜங் ஆஸ்பத்திரி, பழைய டில்லி ரயில்வே ஸ்டேஷன் போல இருக்கிறது" என்று அவர் வர்ணித்திருக்கிறார். பீகாரில் முஸாஃபர்பூர் பொது மருத்துவமனைக்குப் போனவர், "அது கசாப்புக் கடை போல இருக்கிறது" என்று சான்றிதழ் தந்ததுடன், "மேலும் ஐந்து நிமிஷம் தாம் அங்கே தங்க நேர்ந்திருந்தால் வயிறு குமட்டி வாந்தி எடுக்க நேர்ந்திருக்கும்" என்றும் கூறியிருக்கிறார்.

ஃபொதே தார் தமிழ்நாட்டு ஆஸ்பத்திரிகளுக்கு இன்னும் விஜயம் செய்யவில்லை என்று எண்ணுகிறோம். ஏனெனில் அப்படி வந்திருந்தால் திரும்பிப் போயிருக்க மாட்டார். ஹார்ட் அட்டாக் வந்து இங்கேயே படுத்து விட்டிருப்பார்! அவர் இங்கே வரவே வேண்டாம். டாக்டர் பி. ராமமூர்த்தியின் அதிகாரபூர்வ அறிக்கையைப் படித்தாலே போதும், அவருக்குத் தலை சுற்றி மயக்கம் வரும், நிச்சயம்!

தமிழக மக்களுக்கோ, ராமமூர்த்தி அறிக்கையைப் படிக்கக் கூட வேண்டியதில்லை. தங்களுக்கோ அல்லது தங்கள் உறவினருக்கோ உடல்நலக் குறைவு ஏற்படும் போது நன்றாக அனுபவித்தே வருகிறார்கள். இங்கு இறக்குமதி செய்யப்பட்ட உபகரணங்கள் பல ஆண்டுகளுக்குப் பார்சல் பிரிக்கப்படாமலே வராந்தாக்களில் கிடப்பது சகஜம். அப்படியே பிரித்து நிறுவப்பட்டாலும் அதைப் பயன்படுத்தும் ஆற்றல் உள்ளவர் நியமிக்கப்படாததால் அது கும்பகர்ணத் தூக்கத்தில் ஆழ்ந்து கிடப்பது அதைவிட சகஜம். சமீபத்திய செய்தி, பொது மருத்துவமனைகளில் மருந்துகளுக்கே பஞ்சம் என்பது! சில நாட்களுக்கு முந்தைய செய்தி, சாக்கடை நீர், குடிநீர்க் குழாயில் கலந்து விட்டதால் ஆபரேஷன்கள் ஏதும் நடக்காது என்பது! அரசு ஆஸ்பத்திரி என்றாலே மூக்கைப் பிடித்துக் கொண்டு நுழைய வேண்டிய நிலை என்னும் போது நோயாளிகள் காலைக் கடன்களை முடிக்க எவ்வளவு அவதிப்படுவார்கள் என்பதைக் கூறத் தேவையில்லை. அவுட் பேஷண்ட் வார்டு பற்றிச் சொல்லவே வேண்டாம் என்றால், டாக்டர்களின் இமர் வேலை நிறுத்தம் பற்றிப் பேசவே கூடாது! விபத்து வார்டுகளில் 'போலீஸ் கேஸ்' என்பதாக ஒரு சிக்கலை உருவாக்கி, ஆபத்தான நிலையில் உள்ளவரைக் கண்டுகொள்ளாமல் காலம் கடத்துவது போன்ற கொடுமை வேறு என்ன உண்டு?

இத்தகைய சூழ்நிலையில் மத்திய சுகாதார அமைச்சர் குத்தலாகப் பேசுவதுடன் தமது கடமை முடிந்து போய் விட்டதாக எண்ணினால் மக்களின் பாராட்டுக்குப் பதில் வெறுப்பையே சம்பாதித்துக் கொண்டவராவார். பிரத்யட்ச நிலைமையை அப்பட்டமாகக் கூறுவது ஆஸ்பத்திரிகளில் உள்ள மேல்மட்ட நிர்வாகிகள் முதல் அடிமட்ட ஊழியர் வரை எல்லோரையும் தட்டியெழுப்பிப் பொறுப்புணர்வுடன் நடந்து கொள்ள வைக்குமானால் வரவேற்கத்தக்கதே. ஆனால் அவ்வாறு நடக்கவா போகிறது?

கேவலமான நிலைமையை மாற்றி அமைக்க அவர் இரண்டு விதங்களில் நடவடிக்கை எடுக்க வேண்டும். இருக்கின்ற உபகரணங்களை இன்னும் திறமையாகப் பயன்படுத்துவது எப்படி? இருக்கின்ற ஊழியர்கள், டாக்டர்கள் ஆகியோரிடம் மேலும் பொறுப்புணர்வை வளர்ப்பது எவ்வாறு? இருக்கின்ற தேவையற்ற நடைமுறைச் சிக்கல்கள் கட்டுப்பாடுகளை ஒழித்துக் கட்டுவது எங்ஙனம்? இவை முதல் படி. இரண்டாவது படி, மேலும் என்னென்ன அபிவிருத்திகளைச் செய்வது? முதல் அம்சத்தைக் கவனித்து விட்டு இரண்டாவது படியில் அடியெடுத்து வைப்பது நலம். கட்டப்படும் மேல் மாடி சரிந்து விழாதிருக்க அஸ்திவாரம் பலப்படுத்தப்பட வேண்டும்.

ஒரு சின்ன யோசனை : ஆஸ்பத்திரிக்குள் நுழையும் நோயாளிகளிடம், 'போனஸ் கேஷ் சர்டிஃபிகேட்டு'களை அரசு வழங்கலாம். தமக்கு நன்கு பணியாற்றியவரிடம் அதை அவர்கள் தரக் கோரலாம். பெறுபவர், அதைக் காசாக்க முடியும் என்பதால் லஞ்சம் அடியோடு ஒழியும்; சேவை பன்மடங்கு பெருகும்.



# கல்கி



1991
அக்டோபர் 27
மலர் : 50
இதழ் : 13
பிரஜோத்பத்தி
ஐப்பசி 10

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

## தஞ்சை மாவட்ட நன்னிலம் தாலுகாவில் அமைந்துள்ள
## ஸ்ரீ ருத்ரகங்கை ஸ்தல வரலாறு

சோழ நாட்டின் நடுவில் ஹரி நதியின் கரையில் உள்ளது ஸ்ரீ ருத்ரகங்கை க்ஷேத்ரம். அங்கு பாஸ்கர முனிவர் தவம் செய்து கொண்டிருந்தார். ஒரு நாள் கிழவர் ஒருவர் ஒரு இளம் பெண்ணுடன் அங்கு வந்து, தான் வடதிசை யாத்ரை போவதாகவும், யாத்ரை முடிந்து திரும்பும்பொழுது இந்த பெண்ணை அழைத்துப் போவதாகவும் அது வரை இவளை ஜாக்ரதையாக பாதுகாத்து வரும்படியும் சொல்லிப் போனார். ஒரு நாள் அந்தப் பெண் ஹரி நதியில் இறங்கி அதிலேயே கலந்து மறைந்து விட்டாள். கிழவர் திரும்ப வந்து பெண் எங்கே என்று கேட்டதும் திகைத்துப் போன முனிவர் நடந்ததைக் கூறினார். ஆனால் அந்தக் கிழவர் முனிவரை தரக் குறைவாகப் பேசி, எப்படியாவது நீ பெண்ணைக் கொண்டு வந்தே ஆக வேண்டும் என்று கண்டிப்பாகக் கூறினார். செய்வகை அறியாது முனிவர் அங்குள்ள சிவலிங்கத்தை "ஆபத்ஸஹாயா" என்று கட்டிக் கொண்டு, கதறியபடி ஸ்தோத்ரம் செய்தார். உடனே அந்த கிழவர் கல்யாண ஸுந்தரமூர்த்தியாய் பார்வதியுடனும், தலையில் கங்கையுடனும் தர்சனம் கொடுத்து, முனிவரை பார்த்து, "உன்னை சோதிக்கவே இந்நாடகம் நடத்தினோம். உன்னிடம் விட்டுப் போன பெண் கங்கை. இன்று முதல் இந்த நதியில் நீராடுபவர்களுக்கு த்ரிவேணியில் நீராடிய பலன் கிட்டும், நீ செய்த ஸ்தோத்ரத்தை படிப்பவர்களின் ஆபத்துகள் விலகும்" என்று அருளினார்.

இந்த ஆலயம் ஜீர்ணோத்தாரணம் செய்து கும்பாபிஷேகம் செய்ய ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் அருளாசியுடன் ஆரம்பிப்பதாயிருக்கிறது. ஸ்ரீ ஆபத்ஸஹாயரின் க்ருபையால், தேசத்துக்கும் தனி மனிதர்களுக்கும் ஏற்பட்டுள்ள ஆபத்துகள் விலகி நன்மை உண்டாக வேண்டும் என்று ப்ரார்த்தித்துக் கொள்கிறோம்.

* * * * * *

நன்கொடைகளைக் கீழ்கண்ட பெயர்களில்

1) ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர ஸ்வாமிகள் பொன்விழா நற்பணி மன்றம் அல்லது 2) ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் பொன்விழா சாரிடபுள் டிரஸ்ட் என்ற ஏதாவது ஒரு பெயருக்கு காசோலையோ அல்லது டிமாண்ட் டிராப்டோ எடுத்து அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆர். பாலசுப்பிரமணியன்,**
'ராமப்ரியா',
பொருளாளர், ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் நற்பணி மன்றம்,
முடிகொண்டான் - 609 502, தஞ்சாவூர் ஜில்லா.

நன்கொடைகளுக்கு வருமான வரிச் சட்டம் 1961, 80.ஜி. பிரிவின்படி
31.3.1992 வரையில் விலக்கு உண்டு.

எக்ஸ்-ரே படங்கள் இரு பரிமாணப் படங்களாக இருப்பதால், உடலினுள் உறுப்புகளில் தோன்றும் கட்டிகள், முதலியனவற்றை முழுமையாகத் தெரிந்து கொள்வது கடினமாக இருந்தது. இதில் முன்னேற்றமாக C. T. ஸ்கான் முறை வந்தது.

வயிற்றுக்குள் கணையம், கல்லீரல், மார்புக் கூட்டினுள் இருதயம், நுரையீரல், நாளமில்லாச் சுரப்பிகள் முதலியவற்றை கம்ப்யூட்டர் உதவியின் மூலம், தெளிவாக மேலிருந்து கீழோ, பக்கவாட்டிலிருந்தோ அல்லது குறுக்காகவோ காண C.T. ஸ்கானர் உதவுகிறது. இது முப்பரிமாணப் படம். ஆனால் இதிலும் எக்ஸ் கதிர் வீச் சுக்கள் உபயோகிக்கப்படுவதால், எக்ஸ்ரே உபயோகிப்பதில் உள்ள கெடுதல் இந்தப் பரிசோதனையிலும் உண்டு. கருவுற்றிருக்கும் பெண்கள் எக்ஸ் கதிர் வீச்சுக்கு ஆளானால், வயிற்றுக்குள் இருக்கும் குழந்தையைப் பாதிக்கும்; உடற்குறையுடன் அது பிறக்க சாத்தியக்கூறு உண்டு.

இந்த இரண்டு முறைகளிலும் பயன்படுத்தப்படும் எக்ஸ்-ரே கதிர்கள், எலும்பு தவிர மற்ற உறுப்புக்களின் அமைப்பு பற்றிக் கண்டறிய அதிகம் உதவவில்லை.



# உடலுக்குள்ளே ஊடுருவிப் பார்க்க...

தவிர, எக்ஸ் கதிர்களின் தீய விளைவுகள் காரணமாக, இவற்றை ஓரளவுக்கு மேல் உபயோகப்படுத்த முடியவில்லை. இந்தக் குறையைப் போக்க, நுண்ணொலி எனப்படும் அல்ட்ரா சவுண்ட் முறை கண்டுபிடிக்கப்பட்டது.

நுண்ணொலி சப்த அலைகளை டிரான்ஸ்ட்யூசர் எனும் கருவி உண்டாக்க, அந்த அலைகள் உடலில் உள்ள உறுப்புகளில் வெவ்வேறு அளவுக்குத் திருப்பப்பட்டு, திரும்ப அதே கருவியை வந்து சேருகிறது. இவற்றை கம்ப்யூட்டர் ஆராய்ந்து, ஒரு படமாக (தொலைக்காட்சிப் பெட்டியில் இருப்பது போன்ற) திரையில் பிம்பமாகக் காண்பிக்கிறது. கருவுற்றிருக்கும் போது கருவின் தன்மையையும், நிலையையும் கணிக்கவும், கல்லீரலில் உள்ள புற்று நோய், பித்த நீர்ப்பை, பாதை இவற்றுள் கல், புற்றுநோய் முதலியவற்றையும் காண முடிகிறது. நுண்ணொலி, மற்றெல்லா பிம்ப முறைகளை விட எளிதில் கிடைக்கக் கூடிய, செலவு அதிகமாகாத, உடலுக்குக் கெடுதல் செய்யாத ஒரு பிம்ப முறை.

இதையடுத்து நியூக்ளியர் இமேஜிங் எனப்படும் நிழற்பிம்ப முறை சமீப காலத்தில் உருவாகியது. உடலில் ஒவ்வோர் உறுப்பிற்கும் ஒரு ரசாயனப் பொருள் அவசியம். உதாரணமாக, தைராய்டு சுரப்பிக்கு அயோடின் உப்பு அவசியம். சில பாஸ்பரஸ் ரசாயனப் பொருள்கள் எலும்புக்குத் தேவை. இந்தப் பொருள்களுடன் ரேடியோ ஆக்டிவிடியைச் சேர்த்து விட்டால், கம்மா

# அடுத்த இதழ்

## தீபாவளிச் சிறப்பிதழ்



காமிராவைக் கொண்டு, உடலில் எந்த இடத்துக்கு அந்த ரசாயனம் செல்லுகிறது எனத் தெரிந்து கொள்ளலாம். அயோடின் தைராய்டிலும், பாஸ்பர உப்புக்கள் எலும்பு அதன் மஜ்ஜை (மாரோ)யிலும் பனிச் சென்று தெரியும். எலும்பினுள் புற்றுநோய் இருந்தால், இருக்கும் இடத்தில் இந்த உப்பு அதிகம் சேர்ந்து படத்தில் நன்றாகத் தெரியும். கம்ப்யூட்டர் உதவியுடன், கம்மா காமிரா மூலம் எடுக்கப்படும் இந்தப் படங் களை டேப்புகளில் சேகரித்து (டெலிவிஷன் போன்ற) திரையிலும் காண முடியும்.

அணுவினுள் புரோட்டான், நியூட்ரான் போன்ற நுண் அணுக்கள் சுற்றிக் கொண்டே இருக்கின்றன. ஒரு வலுவான காந்தம் மூலம் இவற்றைத் திசை திருப்பி அணி வகுத்து நிறுத்த முடியும். இதற்கு ரேடியோ கதிர்கள் உபயோகிக்கப்படுகின்றன. இந்த ரேடியோ கதிர்கள் நீக்கப்படும் நேரத்தில்,

மின்காந்த அலைகள் வெளிப்படுகின்றன. கம்ப்யூட்டர் மூலம் இவற்றைக் கணிக்க முடியும். இதுதான் மாக்னடிக் ரிசோனன்ஸ் இமேஜிங் முறை. திசுக்களில் எவ்வளவு ஹைட்ரஜன் புரோட்டான் இருக்கிறது என்று அளந்து முப்பரிமாணப் படங்களாக எடுத்துக் காண்பிக்க கம்ப்யூட்டர் உதவுகிறது. வியாதியுள்ள திசுக்கள், கட்டி மற்றும் புற்றுநோய் மாற்றங்கள் இவை எல்லாவற்றையும் இவை எடுத்துக் காட்டுகின்றன.

எக்ஸ் கதிர் வீச்சுக்கள் உடலுக்குத் தீங்கு செய்வது போல், எம். ஆர். ஐ. ஸ்கானரால் உடலுக்குத் தீங்கு விளையாது. ஆனால் ஸி. டி. ஸ்கானரைப் போல, ஐந்து ஆறு மடங்கு இதற்குச் செலவாகும்!

விளக்கம் : டாக்டர் எம். எஸ். வெங்கட்ராமன்

சந்திப்பு : சாருகேசி

# அன்புள்ள அம்மு...

**ப**க்கத்தில் புதிதாகக் குடி வந்துள்ள பத்மா மாமி கொலுவுக்குக் கூப்பிட்டார்னு போனேன். பொம்மைகளும் அலங்காரமும் பிரமாதம். மாமியும் அதற்கு ஈடாகத்தான் அலங்கரித்துக் கொண்டிருந்தார். அவர் மருமகள் சுசிலா மட்டும் பழைய புடைவை உடுத்திக் கொண்டு உள் ரூமில் சுருண்டு உட்கார்ந்திருந்தாள். 'என்னம்மா உடம்புக்கு...?' என்றேன். உடனே பத்மா மாமி, ''அதொண்ணுமில்லை; அவளும் கொலு உட்கார்ந்துவிட்டாள்....'' என்றாளே பார்க்கணும்....!

பாவம்! அந்தப் பெண்ணின் முகம் சிவந்து போய் விட்டது!

இருபத்தோராம் நூற்றாண்டை எட்டித் தொடும் நிலையிலும் இப்படியொரு கொடுமை நிலவுகிறதே என்று எனக்கு ஒரே குடைச்சலாகிவிட்டது. இந்த நிகழ்ச்சியை விஜயாவிடம் சொன்னபோது இதைவிடக் கொடுமையான ஒன்றை அவள் சொன்னாள். அவள் காலேஜ் பட்டி மன்றத்தில் ஒரு பையன் பேசினானாம். ''பெண்களால் மாசத்தில் மூன்று நாள் எந்த வேலையும் செய்ய முடியாது - அதனால் பெண் கல்வியும் அவர்கள் வேலைக்குச் செல்வதும் விழலுக்கு இறைத்த நீரே...'' என்று! ஒரு வாதத்துக்காக என்றாலும் இவ்வளவு அநாகரிகமாகப் பேசலாமா?

**சா**ஸ்திரத்தில் எவ்வளவோ நல்ல விஷயங்கள் சொல்லப்பட்டுள்ளன. அவற்றையெல்லாம் இம்மி மாறாமலா கடைப்பிடிக்கிறோம்? காலத்துக்குக் கொஞ்சமும் ஒவ்வாத இந்த அநாகரிகப் பழக்கத்தை மட்டும் ஏன் கட்டிக் கொண்டு அழ வேண்டும்! 'அந்த' நாட்களில் சுத்தமாகவும் சுகாதாரமாகவும் இருப்பதுதான் இப்போது சாத்தியமாகி விட்டதே....

பத்மா மாமியை நேற்றுக் கூப்பிட்டு இதையெல்லாம் சொல்லிவிட்டேன். நல்ல காலம், அவர் 'It's none of your business' என்று சொல்லவில்லை. மாறாக ''எனக்கு எல்லாம் புரிகிறது அலமேலு! ஆனா, அம்பது வருஷமா இந்தப் பழக்கத்தைப் பார்த்தும் கடைப் பிடிச்சும் வந்திருக்கேன். இப்ப திடீர்னு எல்லாத்தையும் மாத்திக்க மனசு இடங் கொடுக்கலையே....'' என்று ஒரு போடு போட்டுவிட்டார்!

இந்த மாதிரி மனம் சார்ந்த விஷயங்களில் மாறுதல் ஏற்படுவது எவ்வளவு கஷ்டம் என்று யோசித்த போது மலைப்பாக இருந்தது.

பத்மா மாமி போன்ற அம்மாக்களோ மாமியார்களோ அமைந்துவிட்டால், ''எனக்கு இதிலெல்லாம் நம்பிக்கை கிடையாது. ஆனால் உங்கள் உணர்வுகளை மதிக்கறதுனால நீங்க விரும்பறபடி செய்யறேன்...'' அப்படின்னு பெண்களும் மருமகள்களும் குறைந்த பட்சம் சொல்ல லாமே. அப்படி சொல்வதற்குக் கூட நம்மில் பலருக்குத் துணிச்சல் இல்லை என்பது ஒரு புறம் இருக்க, இதையெல்லாம் அவமானமாகவே பல பெண்கள் கருதுவதில்லை என்பது இன்னும் வேடிக்கை. எங்கே, சிந்திக்க ஆரம்பித்தால் தானே....?

நம் மாலுக் குட்டி நிச்சயமாக சிந்திக்கும் பெண்ணாக வளர வேண்டும். இப்போதே முஸ்தீபுகளைத் தொடங்கி விடு!

அன்புடன்,

அலமு

வாசகர் யோசனை : கே.ஆர். விஜயா, கோவை.



துவாரகையின்
புனிதமான எழில்,
பவானியின்
அமைதியான அழகு,
ஜோக் நீர்வீழ்ச்சியின்
மனங்கவரும்
ஒயில்... எனப் பல
அழகுகளை உங்கள்
கரங்களில்
தவழச்
செய்யும்.



* வண்ணப்படம் : உத்ரா

# கல்கி

## தீபாவளி மலர் - 1991

கட்டுரைகள் :

- ஏற்றமிகு கல்வி
  - மாண்புமிகு அமைச்சர் ஆர். எம். வீரப்பன்
- உள்ளங்கை அளவில் இயற்கையின் அற்புதம்
  - டாக்டர் சின்னசாமி
- கோயில் சொத்துக்களைக் கண்ணெனக் காப்போம்
  - நீதிபதி கிருஷ்ணசாமி ரெட்டியார்
- கம்பநாடனின் நவரசம்
  - நல்லபெருமாள்
- இருளும் ஒளியும்
  - கிருபானந்த வாரியார்

ராஜாஜி, அமரர் கல்கி உள்பட முன்னணி எழுத்தாளர்கள் எழுதிய முத்தான சிறுகதைகள்.

கவிதைகளின் களஞ்சியம் :

- மீ. ப. சோமு
- சௌந்தரா கைலாசம்
- வைரமுத்து
- நா. சி. வரதராஜன்
- மதிவண்ணன்
- நிர்மலா சுரேஷ்

கலைநயம் மிகுந்த வண்ணப்படங்கள், கண்ணைக் கவரும் ஓவியங்கள்

விலை ரூ. 30/-    பதிவுத் தபால் செலவு : ரூ. 8.00

உடனடியாக ஏஜெண்டிடமோ கல்கி அலுவலகத்துக்கு நேரில் எழுதியோ பதிவு செய்து கொள்ளுங்கள்.

மானேஜர், கல்கி, சென்னை - 32

# வாஷிங்டன் வைரம்

7

"டாக்சி..." என்று குரல் கேட்டது.

தொப்பியைச் சரி செய்து கொண்டு திரும்பிப் பார்த்தான் ஸாம். நடைபாதையில் வந்து கொண்டிருந்த மனிதன், ஸாமை நெருங்கினான்.

"நேஷனல் ஏர்போர்ட்?" என்று கேள்வி பாதியாக உத்தரவு பாதியாகக் கேட்டான் வந்த ஆள்.

ஸாமுக்கு கேட்டவனுடைய குரலின் கடுமை பிடிக்கவில்லை. சவாரியாயிற்றே. வேண்டாம் என்று சொல்லவும் மனமில்லை. மெல்ல முணுமுணுத்துக் கொண்டே பின்கதவைத் திறந்தான்.

அந்த மனிதன் டாக்சியில் ஏறி உட்கார்ந்ததும் ஸாம் ஏர்போர்ட்டை நோக்கி ஓட்டினான். கூடவே ரேடியோவை முடுக்கினான்.

'ஸ்மித்ஸோனியன்' கட்டடத்தில் நடந்த வெடிகுண்டு விபத்தை எஃப்.பி.ஐ. அதிகாரிகள் துப்புத் துலக்குவதாயும் வெடி வைத்தது ஓர் இந்திய நாட்டு மனிதனாக இருக்கலாம் என்றும் செய்தி சொன்னார்கள்.

பொது மக்களுக்குச் சேவை செய்யும் நல்ல இடங்களை நாசமாக்கும் யாரும் நிச்சயம் பிடிபடுவார்கள் என்ற போக்கில் ஸாம் ஏதோ சொன்னான். ரேடியோவை நிறுத்தும்படி பின்னாலிருந்த மனிதன் உத்தரவு போட்டான். ஸாம் ரேடியோவை நிறுத்தி விட்டுக் கண்ணாடியில் அந்த மனிதனின் முகம் தெரிகிறதா என்று கவனித்தான். சரியாகத் தெரியவில்லை.

'நேஷனல் ஏர்போர்ட்' வந்ததும் எந்த விமானத்தில் பயணம் என்று ஸாம் கேட்கவே 'அமெரிக்கன் ஏர்லைன்ஸ்' என்று பதில் வந்தது. அவன் குறிப்பிட்ட அந்த இடத்துக்கு டாக்சியைக் கொண்டு நிறுத்தி விட்டு ஸாம் வெளியே வந்தான்.

அந்த ஆளும் வெளியே வந்து இருபது டாலர் நோட்டை நீட்டினான். மீட்டர் பதினொரு டாலர் அளவு காட்டியது. மீதிப் பணத்தை எண்ண ஆரம்பித்தான் ஸாம்.

"இட்ஸ் ஆல் ரைட். கீப் தி சேஞ்ச்" என்றான் அந்த மனிதன்.

ஸாமுக்கு ஆச்சர்யம் தாங்கவில்லை. அவனை ஒருமுறை பார்த்தான். அந்த ஆள் முகத்தில் வலது கண்ணுக்குக் கீழே நீண்ட வடு இருந்தது. எங்கே யாரிடம்' கத்திக் குத்து வாங்கினானோ என்று ஸாம் எண்ணிக் கொண்டான்.

"ஐ வாண்ட் மை லக்கேஜ்" என்றான் வடுக்காரன்.

"ஓ... யா... யா..." என்று ஸாம் காரின் பின்புறத்தைத் திறந்தான். கறுப்பு நிற சூட்கேஸ் ஒன்று மட்டும் இருந்தது. எடுத்து வெளியே வைத்தான். அதை எடுத்துக் கொண்டு சென்ற அவன், 'செக் இன்' இடத்தில் "ஸான் பிரான்ஸிஸ்கோ" என்று சொன்னது ஸாம் காதில் விழுந்தது.

● ● ●

ஏர்போர்ட்டிலிருந்து வெளியேறிக் கொண்டிருந்த ரகுராமனின் ஒவ்வொரு கையிலும் ஒரு ஸூட்கேஸ். அவன் பின்னால் வைத்தியநாதன், அவருடைய மனைவி பூர்ணம். அவர்களும் ஆளுக்கு ஒரு கைப் பையுடன் நடந்து வந்தனர்.

"மிஸ்டர் வைத்தி... மிஸ்டர் வைத்தி" என்று பின்னாலிருந்து அவரை யாரோ கூப்பிடுவதைக் கேட்டு மூவருமே நின்றார்கள்.

ஒரு கையில் சூட்கேஸும் இன்னொரு கையில் 'டியூடி ஃப்ரீ' கடைகளில் வாங்கிய சாமான்களுடனும் ஓர் இந்தியர் விரைந்து அவர்களை நோக்கி வந்து கொண்டிருந்தார்.

"அடடே... வாங்க மிஸ்டர் நல்ல தம்பி... நீங்க எந்த ஃப்ளைட்லே வந்தீங்க?" உற்சாகத்துடன் வைத்தி சொன்னதைக் கேட்டதும் ரகுராமனுக்கு ஏற்பட்ட சந்தேகம்: 'வைத்தி மாமாவுக்கு நல்ல தம்பியை எவ்வளவு நாளாகத் தெரியும்? நல்லதம்பியையும் நம்முடைய அபார்ட்மெண்டுக்கே கூப்பிட்டுடுவாரோ?' என்பது தான்.

அடுத்த நிமிடமே அவனுடைய சந்தேகம் தீர்ந்தது.

"நாம நியூயார்க் ஏர்போர்ட்டிலே இறங்கினதும் 'கஸ்டம்ஸ்' முடிஞ்சு நான் 'யூ.எஸ்.ஏர்.'லே வந்தேன். நீங்கதான் 'அமெரிக்கன்'ல வந்துட்டீங்க.. இந்த தம்பிதான் உங்க மருமான் ரகுராமனா? எப்படி இருக்கீங்க, தம்பி?" நல்லதம்பி ரகுராமனை வாயார விசாரித்தார்.

ரகுராமன் பதில் சொல்லி முகவுரைகள் முடிந்ததும், வைத்தியநாதன், "ரகு... இவர் வாஷிங்டன் சுத்திப் பார்க்கணும்னு வந்திருக்கிறார். நம்ம கூடவே தங்கலாம்னு நான்தான் சொன்னேன்... சரிதானே?"

இருப்பது ஒரு 'பெட்ரூம்' அபார்ட்

உாசன்

மெண்ட்! அதில் நாலு பேர்!

''நான் சொல்ல என்ன இருக்கிறது, மாமா?'' என்றான் பிடி கொடுக்காமல்.

''என்ன நல்லதம்பி... நான் என் மருமானைப் பத்திச் சொன்னது சரிதானே...'' வைத்தி பெருமை அடித்துக் கொண்டார்.

அனைவரும் பேசிக் கொண்டே ஏர் போர்ட்டுக்கு வெளியே வந்தனர்.

டாக்சியை வரிசையாக அனுப்புபவன் அடுத்த வண்டியை அவர்களுக்குப் போகுமாறு சைகை காட்டினான். டிரைவர் ஸாம் தான்!

வண்டியில் எல்லோரும் ஒருவழியாக உட்கார்ந்ததும் தான் இருக்குமிடத்தை டிரைவருக்குச் சொன்னான் ரகுராமன்.

பூர்ணம் மாமி பேச ஆரம்பித்தாள். ''ரகு... உன் மாமாவுக்கு ரொம்ப வருஷமா இருந்த ஆசை நிறைவேறிடுத்துடா. வாஷிங்டன் டி.சி.க்கு வந்து சாவி 'வாஷிங்டனில் திருமணம்' கதையில் எழுதினாரே அந்த இடங்களைப் பாத்துடணும்னு நீ அமெரிக்கா புறப்பட்ட அன்னலேயிருந்து சொல்லிண்டுருந்தார். வேளை வந்துடுத்து இப்போ.''

இவர்களுடைய பேச்சில் டாக்சி டிரைவர் ஸாம் தானும் கலந்து கொண்டான்.

''அம்மா சொல்றது சரிதாங்க... நான் கூட 'வாஷிங்டனில் திருமணம்' படிச்சிருக்கேன்.''

ரகுராமன் உட்பட எல்லோருமே ஆச்சர்யப்பட்டார்கள்.

சம்பந்தன் என்ற பெயரை ஸாம் என்று ஆக்கிக் கொண்ட தன் வாழ்க்கை வரலாற்றை ஒருவழியாக அவன் சொல்லி முடித்த போது ரகுவின் அபார்ட்மெண்ட் வரை வந்தாயிற்று.

## 8

நல்லதம்பியும் ரகுராமனும் அபார்ட்மெண்ட்டின் 'லிவிங் ரூமி'ல் தூங்க, வைத்தியநாதனும் பூர்ணமும் 'பெட்ரூமி'ல் தூங்கினார்கள். பயணக் களைப்பு காரணமாய்க் காலையில் அவர்கள் இன்னும் எழுந்திருக்காததால், ரகுராமன் தன் காலை வேலைகளை முடித்துக் கொண்டு அவர்களுக்கு ஒரு தாளில் குறிப்பெழுதித் தன்னுடைய தொலைபேசி எண்ணையும் வைத்து விட்டுப் புறப்பட்டான். மணி ஒன்பதரை. டாக்டர் வைரமூர்த்தி அவனைப் பதினோரு மணிக்கு வரச் சொன்னதை மதித்துப் போயாக வேண்டும்.

டாக்டர் வைரமூர்த்தி பைப்பில் புகை பிடித்துக் கொண்டிருப்பதை ரகுராமன் பார்த்துக் கொண்டே அவருடைய அறைக்குள் நுழைந்தான்.

''குட் மார்னிங், டாக்டர்...''

''ஓ... யெஸ். ரகுராமனா... இப்பத்தான் ஞாபகம் வருது, பதினோரு மணிக்குச் சரியா வந்துட்டியே... அப்படி உட்காரு'' என்று எதிரிலிருந்த நாற்காலியைக் காட்டினார்.

''ரகுராமன்... நான் இப்போ வரச் சொன்னது ஏன் தெரியுமா?''

''என்னுடைய பிஎச்.டி. பற்றிப் பேசத்தானே வரச் சொன்னீங்க?''

''நேற்றுச் சொன்ன போது அப்படித்தான் நினைச்சேன்... ஆனா...''

வைரமூர்த்தி கையில் பைப்புடன் எழுந்து நின்றார். மெல்ல ரகுராமனை



நோக்கி நடந்து வந்து கொண்டே, ''என் செக்ரட்டரியும், ஒரு 'கிராஜிவேட் ஸ்டு டண்டும்' சேர்ந்து என் மேல் பழிவரும் படியாச் சதி செய்யறதா எனக்குத் தகவல் வந்திருக்கு, மிஸ்டர் ரகுராமன்'' என்றார்.

ரகுராமன் துள்ளிக் குதிக்காத குறை தான். அவன் உடல் வியர்த்துக் கொட்ட ஆரம்பித்தது. கொஞ்சம் நெளிந்தான்.

நிர்மலாவும் தானும் முதல் நாள் இரவு பழைய போஸ்ட் ஆபீஸ் கட்டடத்தில் பார்த்துப் பேசிக் கொண்டதை இந்த மனிதன் எப்படித் தெரிந்து கொண்டான்? நாங்கள் பேசிக் கொண்ட விவரம் முழுக்க இவனுக்குத் தெரிந்திருக்குமோ? ஐயோ! நிர்மலாவின் கதி என்ன? 'இம்மிக்ரேஷன்' அதிகாரிகளிடம் தன்னைப் பற்றி வத்தி வைப்பானே இவன்... எதிர்காலமே இருண்டு விட்டதாய் ரகுராமனுக்குப் பட்டது. இந்தச் சமயத்தில் மாமா, மாமி... நல்லதம்பி வேறே தொத்திக் கொண்டிருக் கிறார்களே... எல்லோருக்கும் தெரிந்து விட்டால்...

ரகுராமன் அவரை ஏறிட்டுப் பார்த் தான். அவன் தோளில் அவர் மெல்லத் தட்டி, ''ரகுராமன்... இந்த வைரத்தைப் பத்தி நீ நல்லாத் தெரிஞ்சுக்கற நாள் நெருங் கிட்டிருக்கு'' என்றார். திடீரென ஒருமை யில் அழைக்கவே ரகுராமன் நிலைதடுமாறி னான். தமிழ்ப் படங்களில் வரும் வில் லன்கள் இதுபோல் பேசிக் கேட்டுத்தான் அவனுக்கு அந்தப் பேச்சே தெரியும்; நடை முறையில் அவனிடம் இப்படி யாருமே பழகியதில்லையே - இதுவரை.

ரகுராமன் முகத்துக்கு நேரே பைப்பை நீட்டி, ''நீ தான் சொல்றபடி செய்யணும்... இத்தனை நாளா எனக்கு ஆராய்ச்சிகளை வெளியிட நீ எழுதிக் கொடுத்த கட்டு ரைகள், மற்ற படைப்புகள் இதெல்லாம் கிடக்கட்டும்... இப்ப நான் சொல்லப் போறது தான் வைரமான திட்டம். இதுக்கு நீ ஒப்புக்கணும்... இல்லேன்னா உனக்கு பிஎச்.டி. வராதது மட்டுமில்லாமல், அமெ ரிக்காவில் எங்கேயாவது ஒரு மூலையில கம்பி எண்றதுக்கு 'இம்மிக்ரேஷன்' மூலம் ஏற்பாடு செய்துடுவேன்... அதோட நிர்ம லாவுக்கு பாவம்...'' என்று நிதானமாக ஒவ் வொரு சொல்லையும் அவன் இதயத்தில் சொருகுவதைப் போலப் பாய்ச்சினார்.

வைரமூர்த்தி தொடர்ந்து தன் திட்டத்தை அவனுக்கு விளக்கினார். அவரு டைய திட்டத்தின் ஒவ்வொரு பகுதியும் நம்பக்கூடியதாய் இல்லை. அவர் சொல்வ தெல்லாம் நடக்கக்கூடியதா? அதுவும் இன் னும் இரண்டு மாதங்களுக்குள்? அப்படி ஒருவேளை குருட்டு யோகம் இருந்து திட்டம் நிறைவேறி விட்டால் அது அமெ ரிக்க நாடு மட்டுமல்ல உலக நாடுகளே கண்டறியாத ஒரு செயலாகுமே! அதில் ரகு ராமனுக்கும் ஒரு பங்கா?

''ரகுராமன்... இதை நீ நல்லா யோசனை செய்து எனக்கு நாளைக்குக் காலை பத்து மணிக்குள்ளே பதில் சொல்ல ணும்... இந்தத் திட்டத்தில் இந்திய சரித் திரமே மாற்றப்படும்... அதில் உனக்குப் பங்கு வேணுமா? இல்லை, நீயும் உன் தோழி நிர்மலாவும் வீணாக அழிய ணுமா?'' அவருடைய கூர்மையான பார்வை மூக்குக் கண்ணாடி வழியாகத் தீப் பொறிகளைக் கக்கியது போல் இருந்தது.

ரகுராமன் அறையை விட்டு வெளியே வந்தான்.

''என்ன மிஸ்டர் ரகுராமன்... உங்க மாமா மாமியெல்லாம் சௌக்கியமா?'' என்று விசாரித்த நிர்மலாவுக்கு, ''அதைப் பற்றி இப்ப என்ன?'' என்று எரிச்சலுடன் சாட்டை அடி கொடுத்து விட்டு வெளி யேறினான்.

## 9

'ஸ்மித்ஸோனியன்' பொருட்காட்சிச் சாலையில் வெடி விபத்து நடந்த சில நாட்களுக்குப் பிறகு ஒரு காலை. முக்கிய அதிகாரிகள் ஏழு பேர் 'நேஷனல் மியூசியம் ஆப் நேச்சுரல் ஹிஸ்டரி' கட்டடத்தின் கீழேயுள்ள ஆராய்ச்சிப் பகுதியில் ஓர் அறையில் கூடியிருந்தனர். எட்டாவது நபராக ஜேம்ஸ் பார்ட்டன் இடது காலில் கட்டுடன், அந்த காலை நீட்டிக் கொண்டு யாரும் முட்டிக் கொள்ளாதவாறு தனியாக உட்கார்ந்திருந்தான். அவனுக்குப் பக்கத் தில் சுவரில் அவன் சாய்த்து வைத்திருந்த ஊன்றுகோல்கள் இருந்தன. தலைமைக் காவல் அதிகாரி டேவிட் பாமர் பேசத் தொடங்கினார்.

''இந்த விபத்து எப்படி, ஏன் ஏற் பட்டது என்பதைக் கண்டுபிடிக்க வாஷிங் டன், டி.சி. போலீஸாரும், எஃப்.பி.ஐ. அதி காரிகளும் மும்முரமாய் இருக்கிறார்கள். ஏஜண்ட் ராபர்ட் வார்னர் வந்திருக்கிறார்'' என்று அவரை அறிமுகப்படுத்தினார். போலீஸ் அதிகாரியை அடுத்ததாகப் பெயர் சொல்லி அறிமுகப்படுத்தினார்.

''விபத்து நடந்த அன்று விபத்தில் காயப்பட்ட காவலர் ஜேம்ஸ் பார்ட்டன் இங்கு வந்துள்ளார். நமக்கு ஏதாவது கேள் விகள் இருந்தால் அவர் பதில் சொல்லத் தயாராய் இருக்கிறார்'' என்று ஜிம்



''என்னது.. இது தமிழ்நாடு காங்கிரஸ் வெடியா?''
''ஆமாம்... ஒரே வெடி இரண்டாப் பிரிஞ்சு ஒரு வெடி இந்தப் பக்கம் போய் வெடிக்கும், இன்னொரு வெடி அந்தப் பக்கம் போய் வெடிக்கும்!''

- கயத்தை சத்யமூர்த்தி



"பாட்டே இல்லாமல் ஒரு படம் எடுத்தேன்; ரெண்டு நாள் கூட ஓடலை..."

"கதையே இல்லாமல் இன்னொரு படம் எடுத்துப் பாருங்க... செம ஓட்டம் ஓடினாலும் ஓடும்!"

- சீர்காழி. வி. ரேவதி

உட்கார்ந்திருந்த திசையில் கையைக் காட்டினார்.

மற்றுமிருந்தவர்களில் மூன்று அதிகாரிகளை மற்றவர்களுக்கு அறிமுகப் படுத்தி விட்டுக் கடைசியில், "இவர்தான் இந்த மியூசியத்தை நடத்துபவர்" என்று பெரிய அதிகாரி மைக்கேல் விண்டனைப் பற்றிச் சொன்னார்.

மைக்கேல் விண்டன் வாஷிங்டன், டி.சி.யில் 'நேச்சுரல் ஹிஸ்டரி' மியூசியத்துக்குத் தலைமைப் பொறுப்பு ஏற்றுச் சுமார் இருபது ஆண்டுகள் ஆகின்றன. அந்த இருபது ஆண்டு காலத்தில் லட்சக்கணக்கில் பொருள்களைத் தேடிக் குவித்திருக்கிறார். இப்போது எட்டுக் கோடி பொருள்கள் மியூசியத்தில் உள்ளன.

"வெடி விபத்தா, நாச வேலையா தீர்மானிக்க வேண்டும். வேண்டுமென்றே செய்யப்பட்ட காரியமென்றால் எதற்காக என்று ஆராய வேண்டும். சேதம் ஏற்பட்டுள்ளது. இரண்டாம் மாடியில் எந்தவிதமான பொருள்கள் இருக்கின்றன என்பது உங்களுக்குத் தெரியும். மியூசியம் பழுது பார்க்கும் வேலையைக் கூடிய சீக்கிரத்தில் ஆரம்பிக்கலாம் என்று இருக்கிறோம். வேலை முடியச் சுமார் இரண்டு மாதங்கள் ஆகும். அதுவரை பாதிக்கப்பட்ட பகுதியிலிருக்கும் பல பொருள்களை வேறு ஒரு மியூசியத்தில் தாற்காலிகமாக வைக்க ஏற்பாடுகள் செய்து வருகிறேன். எல்லாவற்றையும் வேறு இடத்துக்கு மாற்றலாமா இல்லை சிலவற்றைப் பத்திரப்படுத்தி விடலாமா என்பது பற்றி யோசித்தோம். வெடி விபத்து ஏற்பட்ட பகுதி எங்களை யோசிக்க வைத்துள்ளது. ஏஜண்ட் ராபர்ட் வார்னருக்கு ஏதாவது துப்புக் கிடைத்திருக்கிறதா என்று அறிய ஆவலாயிருக்கிறோம்" என்று முடித்தார் மைக்கேல்.

"எங்கள் 'கம்ப்யூட்டர் பைலில்' ஜிம் பர்ட்டன் சொன்ன அடையாளங்கொண்ட எந்த இந்திய நாட்டவனும் இல்லை. டி. சி. போலீஸாரும் இல்லை என்று கையை விரித்து விட்டார்கள். என்றாலும் இன்னும் ஒரு வழி இருக்கிறது.... 'இண்டர்போல்' அதிகாரிகள் மூலமாய்த் தேடலாம்... அதுவும் வெளிநாட்டவன் என்றால் அவர்கள் நிச்சயம் தேட முடியும். ஆனால்..."

"என்ன?" டேவிட் பாமர் கேட்டார்.

"ஜிம் சொன்ன அடையாளம் போதாது. அந்த ஆள் சுமார் ஆறடி உயரம், இந்திய நாட்டவன், கறுப்பானவன் என்றெல்லாம் சொன்னார். வேறு ஏதாவது அடையாளம் உண்டா, ஜிம்?" என்று ராபர்ட் வார்னர் நேரடியாய்க் கேட்டார்.

இருக்கையில் நெளிந்து உட்கார்ந்தான் ஜிம். இதுவரை இவர்களிடம் சொல்ல வேண்டாம் என்று இருந்ததைச் சொல்லி விடலாமா என்று ஒருகணம் யோசித்தான். சொல்லாவிட்டால் பின்னால் வேலைக்கு ஆபத்து வரலாம். எஃப்.பி.ஐயிடம் ஏன் வீண் வம்பு வைத்துக் கொள்ள வேண்டும்?

"அந்த ஆளுக்கு வலது கண்ணுக்குக் கீழே ஒரு நீண்ட வடு இருக்கும்" ஜிம் பர்ட்டன் நிதானமாகச் சொல்லி முடித்தான்.

"இதை நீ ஏன் போன வாரமே என்னிடம் சொல்லவில்லை. சொல்லியிருந்தால் ஒருவேளை அவன் இதற்குள் பிடிபட்டிருக்கலாம். இப்போது அவன் உலகத்தில் எந்த மூலையில் இருக்கிறானோ? அவனைக் கண்டுபிடித்து அவனைப் பயமுறுத்தி, பணம் வாங்கலாம் என்றுதான் நீ சொல்லாமல் விட்டாயா, ஜிம்?" என்று ராபர்ட் கேட்டது அவன் தலையில் இன்னொரு வெடிகுண்டைப் போட்டது போல் இருந்தது.

ஜிம் 'பிளாக் மெயில்' பற்றி நினைத்தது உண்டு. தனக்குத் தெரிந்த மியூசியத்தில் வேலை செய்யும் இன்னொரு காவலன் மூலமாய் அந்த நீண்ட வடுக்காரனைக் கண்டுபிடிக்கலாம் என எண்ணியது உண்மைதான். இது ராபர்ட் வார்னருக்கு எப்படித் தெரிந்தது? ஜிம்முக்குப் புரியவில்லை.

கூட்டம் முடிந்து வெளியே வந்த போது, "ஏய், ஜிம்..." என்று ஒரு குரல் இடது பக்கத்திலிருந்து வந்தது கேட்டு அவன் நின்றான். ஒரு வெள்ளை அமெரிக்கன் அவனை நோக்கி வந்தான்.

சிறிது நேரம் வந்தவனிடம் பேசி விட்டு ஜிம் புறப்பட்டான். "நான் வருகிறேன், ரிச்சர்ட்..." என்றவனைத் தடுத்து நிறுத்தினான் ரிச்சர்ட் மூர் என்ற அந்த வெள்ளை அமெரிக்கன். அவனும் மியூசியத்தில் ஒரு காவலன்.

"இன்னக்கி அதிகாரிகள் கூடி என்ன பேசிக்கிட்டாங்க?" என்று மிகச் சாதாரணமாக விசாரித்தான். அவர்கள் பேசியதைச் சுருக்கமாய்ச் சொல்லி விட்டு ஜிம் படிகளில் இறங்கினான்.

"ஓகோ... அப்படியா சமாசாரம்..." என்று நினைத்துக் கொண்டே இடது கையால் ஒரு சிகரெட்டை எடுத்தான் ரிச்சர்ட். அவனது இடதுபுறங்கையில் பச்சை குத்தியிருந்தது. நிர்மலா, ரகுராமனைக் கண்காணித்த அதே ஆசாமி.

(தொடரும்)

போட்டிக் கதை - 9



மாரி பொய்த்தாலும் தேர்தல் பொய்க்காத இந்த தேசத்தின் ஒரு தேர்தல் நேரம். பட்டி தொட்டிகளெல்லாம் பவுடர் பூசிக் கொள்ள ஆரம்பித்திருந்தன.

அந்த புறம்போக்கு நிலத்தில் ஒவ்வொன்றாக முளைவிட்ட குடிசைகள், பல்கிப் பெருகி, ஏறத்தாழ நூறு குடிசைகளைக் கொண்டு ஒரு சேரி தோன்றியிருந்தது. கூடவே காந்தி நகர் என்கிற பெயரினையும் சூட்டிக் கொண்டது.

காந்தி என்ற பெயர் பெற்ற புண்ணியத்தாலோ என்னவோ மின்சாரம், குடிநீர் போன்ற எந்த வசதியும் இன்னும் அந்த நகரைத் தீண்டாமலேயே இருந்தது. தீண்டத் தகாதவர் வோட்டு கூட இந்த தேசத்தினை ஆள்பவர்க்குத் தேவைப்படுகிறபடியால் தேர்தல் காற்று அந்தச் சேரியையும் தீண்டியது.

ஒரு கட்சிப் பிரமுகர் திட்டமிட்டு அவர்களை வாக்காளர் பட்டியலில் சேர்த்து வைத்திருந்தார். அங்கே ஒரு நானூறு வோட்டுகள் தேறும்.

அந்த கிடைத்தற்கரிய கௌரவம் கிடைத்துவிட்ட படியாலேயே அங்கே அவருக்குச் சில நாட்களாகச் சற்று செல்வாக்கு.

# ஏழைமையை ஓட்டுவோம்

தவிரவும் சமீபத்தில் அந்தச் சேரியின் வடக்குப்புறம் ஒன்று, தெற்குப்புறம் ஒன்று என்று இரண்டு கைப்பம்புகளை அவர் நிறுவியபடியால் அந்தச் சேரியின் வருண பகவான் ஆகிவிட்டிருந்தார் அவர். மேற்படியாளர் தான் அந்தத் தொகுதியின் சட்டமன்ற வேட்பாளர் திருவாளர் புண்ணியகோடி.

அச்சேரி மக்கள் அனைவருமே சற்றே ஓட்டினாற் போல் அருகே எழுந்தருளிக் கொண்டிருக்கும் ஓர் ஐந்து நட்சத்திர ஹோட்டலின் கட்டுமானப் பணிகளில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டவர்கள். அந்தக் கட்டட வேலை ஆரம்பித்த நாட்களில்தான் இந்தச் சேரியின் வரலாறும் ஆரம்பித்தது. எங்கெங்கிருந்தோ பல திக்குகளிலிருந்து கொத்தனார்களாக, சித்தாட்களாக, கூலியாட்களாக வந்தவர்கள்தான் சற்றே நிரந்தரமாக அங்கே வேலையிருக்கவே - கடந்த மூன்று ஆண்டுகளில் குடிசைகளை அமைத்துக் கொண்டிருந்தனர். ஐந்து அடுக்குகளைக் கொண்ட அந்த ஐந்து நட்சத்திர விடுதி ஏறக்குறைய முடியுந்தருவாயை நெருங்கிவிட்டிருந்தது.

காந்திநகர் தன் மக்களுக்குச் சாந்தியையும் சந்தோஷத்தையும் கொடுத்துக் கொண்டிருந்தது என்னவோ நிஜம். கொத்தனார் கோவிந்தனின் மகளுக்கும் பிளம்பர் மாணிக்கத்தின் மகனுக்கும் அங்கேதான் திருமணம் நடந்தது. சித்தாள் சிதம்மா மகள் பூப்பெய்தியபோது மேஸ்திரியின் மனைவி மரகதம் புட்டு சுட வந்தாள். ஆசாரி ஆறுமுகம் பெயிண்டர் பொன்னுசாமிக்கு ஓர் அறுவைச் சிகிச்சையின் போது இரத்தம் வழங்கினான். பின்னர் மைத்துனன் ஆகிப் போனான். இப்படியாக அவர்களிடம் ஒரு



நட்பு மலர்ந்தது. நம்பிக்கை வளர்ந்தது. உறவு வேர் விட்டது. பாசம் பரிணமித்தது. மாலை நேரங்களில் அவர்கள் கூடிக் களித்தார்கள். பாடித் திரிந்தார்கள்.

அவர்களுக்குள்ளேயே ஓர் இளந் தலைவன் தோன்றினான். அவன்தான் இளமாறன். இயற்கையிலேயே புத்திக் கூர்மை கொண்ட அவன், பிளஸ் டூவை முதல் முற்றுகையிலேயே முடித்துவிட்டு ஏழைமை காரணமாக உழைத்து வாழலானான். சென்ட்ரிங் அடிப்படையில் தேர்ச்சிப் பெற்று பணியாற்றி வந்தான். இளையவனாக இருந்தாலும் படித்தவன், பண்பாளன் என்பதால் அனைவரிடமும் பாசத்தைப் பெற்று நேசத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தான். அச்சேரிவாழ் மக்களிடம் கையெழுத்துப் பெற்று நிலப் பட்டாவுக்கென அரசுக்கு மனுச் செய்திருந்தான். இளமாறனின் வசீகரத்தில் ஈர்க்கப்பட்டு கொத்தனார் சிங்காரவேலுவின் மகள் கனகா அவன்பால் காதல் கொண்டிருந்தாள். இளமாறன் அவளை உளமாற நேசித்த போதும் அவன் கனகாவைவிட காந்தி நகரைப் பற்றிக் கண்ட கனவுகளே அதிகம்.

ஒரு பௌர்ணமி இரவில் அவன் மடியில், தலை சாய்த்தபடி கேட்டாள் கனகா:

**பதுவை சந்திரஹரி**

''அந்த ஐந்து நட்சத்திர விடுதியில் எத்தனை பேர் குடியிருக்கலாம்?''

''சேரி முழுவதுமே ஜம்மென்று இருக்கலாம்!'' என்றான் அவன்.

''ஐந்தாவது அடுக்கிலிருந்து பார்த்தால் நட்சத்திரங்கள் மிக அண்மையில் தெரியுமோ!'' என ஐயமெழுப்பினாள் அவள்.

சிரித்த இளமாறன், ''அங்கே வருபவர்க்கு நட்சத்திரங்களைப் பார்க்க நேரமிருக்காது கண்ணே. நிலவும் நட்சத்திரங்களும் கூட நம்மையே விரும்பும்!'' என்றான்.

உடனே கனகாவை பயம் கவ்விக் கொண்டது. 'நிலமென்று நிற்பதற்கு இருந்தால்தானே நட்சத்திரங்களை ரசிக்க முடியும்' என நினைத்தாள். ''நமக்கு நிலப் பட்டா நிச்சயம் கிடைக்குமல்லவா?'' என்றாள்.

''தொகுதி வேட்பாளர் புண்ணியகோடி முடித்து விடுகிறேன் என்று கூறியுள்ளார். வெற்றி பெறுவார். பட்டா தருவார்,'' என்றான் இளமாறன்.

தேர்தல் நாள் நெருங்க நெருங்கக் குடிசைகள் மேலெல்லாம் கொடிகள் முளைத்தன. பணக்கற்றைகளைப் பார்த்தறியாத சிறார்களெல்லாம் துண்டுப் பிரசுரங்களைச் சேகரித்து 'துட்டு' என்று விளையாடினர்.

மாலை நேரங்களில் ஜெனரேட்டர் உதவியோடு தொலைக்காட்சிப் பெட்டி வைத்து, வண்ணப் படங்கள் காட்டப் பட்டன. சிறுவர்களோடு போட்டி போட்டுக் கொண்டு முதியவர்களும் முன்னமர்ந்து பார்த்தனர்.

எம்.ஜி.ஆர் 'நான் ஆணையிட்டால்' என்றார். சிவாஜி 'ஏரு பெரிசா இந்த ஊரு பெரிசா?' என்றார். இடையிடையே புண்ணியகோடி திரையில் தோன்றித் தம் சின்னத்தைக் காட்டி வாக்கு வேண்டினார். 'ஏழைமையை விரட்டுவேன்' என்று சூளுரைத்தார்.

---

> ☛ சுரேந்திரனும் அவரது வீடு
>
> ## ஒரு லட்சாதிபதி பிச்சாதிபதியானார்
>
> **1986-ம் ஆண்டு கேரள லாட்டரியின் ஓணம் பம்பர் பரிசு 25 லட்சம் ரூபாயும், ஓர் அம்பாசிடர் காரும் கேரளாவில் காட்டாக்கடையிலுள்ள சுரேந்திரனுக்கு விழுந்தது. அவரது தொழில் மரச் சாமான்கள் தயாரித்துக் கொடுப்பது. பரிசுப் பணம் 25 லட்சம் ரூபாய் என்றாலும் கையில் வரி எல்லாம் போகக் கிடைத்தது 12.75 லட்சம் ரூபாயும் காரும்தான். மிகவும் இளகிய மனதுடைய சுரேந்திரன் தான் இந்த அதிர்ஷ்டச் சீட்டை வாங்கும் போது கூட இருந்த நண்பனுக்கு ஒரு லட்சம் ரூபாயை இலவசமாக வழங்கினார்.**

---

கனிமரங்கள் கல்லடிக்குத் தப்பாததைப் போல், வாக்காளர் இருந்துவிட்டால் வேட்பாளர் விட்டுவைப்பாரா? அனைத்துக் கட்சிகளும் அங்கே மொய்த்தன.

வாக்குறுதிகள் வீசப்பட்டன. வார்த்தை ஜாலங்கள் காட்டப்பட்டன. ஒரு வேட்பாளர் குடிசை தோறும் ஒரு குத்து விளக்கைக் கொடுத்து, அவர்கள் வாழ்வில் விளக்கேற்றி வைப்பேன் என்றார். இன்னொருவர் எவர்சில்வர் குடங்களைக் கொணர்ந்து கொட்டி அதுவே தம் சின்னம் என்றார்.

புண்ணியகோடி பார்த்தார். புடைவைகளையும் வேட்டிகளையும் வாரி வழங்கினார். இருந்தாலும் அவருக்குப் பயம் தொற்றிக் கொண்டது. இளமாறனை அழைத்து நெடுநேரம் பேசினார். பட்டாவைப் பற்றிப் பல முறை கூறினார். மனைப் பட்டாக்களோடு சேரியையும் புனரமைத்துக் குடிசைகளை கான்கிரீட் குடியிருப்புகளாக்குவேன் என்றார்.

தேர்தலுக்கு இரு தினங்களே இருக்கும் போது அங்கே பணப்புயல் வீசியது. பட்டைச் சாராயம் ஓடியது. தேர்தல் களங்களில் பலப்பரீட்சையை பணமே நிர்ணயம் செய்கின்ற காலமாகிப் போனதால், தன் தொகுதி முழுவதிலும் பட்டுவாடா செய்யக் கூடை கூடையாகப் பணமுடை ஏற்பட்டது புண்ணியகோடிக்கு. ஒன்று அதிகம் போட வேண்டும், இல்லை

''ஏன்ப்பா... ஒன்வேயில வர்றியே... தெரியாதா?''
''தெரியாது சார்!''
''என்ன தெரியாது?''
'' 'மாமூல்' வாங்குற ஆசாமி இங்கே நிப்பார்னு தெரியாது சார்!!!

- 'சுவீட்' ரவி.





பிறகு ஒரு வீடு வாங்கினார். சுரேந்திரன் லட்சாதிபதி ஆனது அறிந்து இதுவரை எட்டிப்பாராத நண்பர்களும் உறவினர்களும் அவரை மொய்க்கத் தொடங்கினர். அவர்களது தேவைக்கு ஏற்பக் கொடுக்கத் தொடங்கினார். அவ்வளவு ஏன், பிச்சைக்காரன் வந்து பிச்சை கேட்டால் கூட 10 ரூபாய்தான் போடுவார். காருக்கு ஒரு டிரைவரையும் ஏற்பாடு பண்ணினார். அந்த டிரைவரோ காரை அடகுவைத்துப் பணம் வாங்கிக் கொண்டு தலைமறைவாகி விட்டார். அப்போதுதான் முதல் தடவையாக சுரேந்திரன் சிந்திக்கத் தொடங்கினார்.

ஆனால் அதற்குள் காலம் கடந்து விட்டது. அவரது பணத்தை எல்லாம் நண்பர் களும் உறவினர்களும் கறந்து கொண்டு மெல்லக் கழன்று விட்டார் கள். பணம் எல்லாம் போனதுடன் சுரேந்திரன் இப்போது கடனாளியாகவும் உள்ளார். ஒரே சொத்து வீடுதான். அந்த வீட்டை விற்றாவது கடனை அடைக்க லாம் எனப் பார்த்தால் எப்படியும் அவர் விற்றுத்தானே தீர வேண்டும் என்பதைப் புரிந்து கொண்டவர்கள் மிகவும் குறைந்த விலைக்குக் கேட்கிறார்கள்.

வீட்டின் முன்னால் FOR SALE என்று போர்டு தொங்க விட்டு விட்டு, சுரேந்திரன் தனது பழைய ஆயுதங்களை எடுத்துக் கொண்டு மீண்டும் மர வேலை செய்கிறார்.

- எஸ். எஸ். மணி

---

யெனில் போட்டதெல்லாம் போனதுதான் என்கிற நிலை ஏற்படவே, பண உரத்தைப் போட்டு வாக்குச் சீட்டெனும் விளைச்ச லைப் பெற அந்த ஐந்து நட்சத்திர ஹோட்டல் உரிமையாளரோடு ஓர் ரகசிய ஒப்பந்தம் செய்து கொண்டார் அவர்.

வோட்டுக்கு ரூபாய் ஐம்பது என்று இறைத்தார். அது வீண்போகவில்லை; வென்றார். வென்றதோடு மட்டுமல்ல; அவரது கட்சியே ஆட்சியையும் பிடித்து விட, ரிசர்வ் தொகுதியின் பிரதிநிதி அவ ரைத் தவிர வேறு ஒருவரும் இல்லாமற் போகவே அமைச்சரவையிலும் இடம் பெற்றார். ஆக, சாராய வியாபாரியாகிய புண்ணியகோடி சமூகநல அமைச்சராகிப் போனார்.

அமைச்சர் புண்ணியகோடி இள மாறனை அழைத்தார் ஒருநாள். வந்தான் இளமாறன் நேரடியாக விஷயத்திற்கு வந்தார்.

''தம்பி, அடுத்த மாசம் ஆறாம் தேதி பைவ் ஸ்டார் ஹோட்டல் 'பல்லவா' திறப்பு விழா. சென்ட்ரல் மினிஸ்டரெல் லாம் வர்றாங்க. அதுக்குள்ளாற குடிசை யெல்லாம் அங்கிருந்து காலியாகணும்.''

அதிர்ந்தான் இளமாறன். எப்படி ஒரு மனிதனால் இப்படி பேச முடிகிறது? வேலை முடிந்ததும் வேசித்தனம் குடி கொண்ட விந்தையைக் கண்டான். அமைச்சர் தொடர்ந்தார்.

''கட்டட வேலைதான் முடிஞ்சுட் டுதே. இப்ப உங்களுக்கும் அங்கே வேலை யுந்தான் இல்லையே! வேலை இருக்கிற வரை உங்களை யாரும் தொந்தரவு பண் ணாம நான் பார்த்துக்கிட்டேன் இல் லையா? ஆந்திரா பாடர்லே ஒரு 'டேம்' கன்ஸ்டிரக்‌ஷன் நடக்குது. நான் வேணும்னா உங்களை அங்கே வேலைக்குச் சிபாரிசு பண்ணறேன்.''

''ஐயா, நாங்க வேலை வெளியிலே தேடிக்குவோம். நிரந்தரமா இருக்க இடம் கிடைச்சாப் போதும். அதுதான் எங்களுக்கு வேணும். நீங்க பட்டா வாங்கித் தர்றேன்னு சொன்னீங்களே?''

''வாஸ்தவம்தான். ஆனா, ரிக்கார்ட்ஸ் பார்த்தேன். அது பொறம்போக்கு இல்லே. ஹோட்டலுக்குச் சொந்தமானதா இருக்கு. அங்கே ஒரு குதிரைச் சவாரி மைதானம் வரப்போகுது. வெளிநாட்டவரெல்லாம் வந்து தங்கற இடமில்லையா? அவங் களுக்கு நாமதானே செய்து கொடுத்தா கணும். இந்த மாதிரி விடுதியே இந்தியா விலே வேற எங்கேயும் இல்லேங்கிறது நமக்கு எவ்வளோ பெருமை. நினைச்சாலே புல்லரிக்கலே?''

உள்ளும் புறமும் எரிந்தது இளமாற னுக்கு.

''அயல் நாட்டவர் நம் முதுகில்தான் குதிரைச் சவாரி செய்ய வேண்டுமா?''

''தம்பி, நீங்க அந்த இடத்தை ஆக்ர மிச்சிருக்கிறது தப்பு. சட்டப்படி குற்றம். நிர்வாகம் அந்த இடத்தை வாங்கிடுச்சு.



# திருப்பூர்



## நகரின் மிகப் பிரம்மாண்ட
## ஜவுளி மாளிகை



## குமரன் சில்க்ஸ்

திருமணப்பட்டு
பாலியஸ்டர்
சேலைகள்
ரெடிமேடுகள்
மற்றும்
அனைத்து
ஜவுளிகளின்
சங்கமம்

**குமரன் சில்க்ஸ்**

போன் : 22888
புது மார்கெட் வீதி,
(பஸ் ஸ்டேண்ட் சமீபம்)
திருப்பூர்.
Telex : 0856-256
FAX : 0421-29080

# சிவகாமியின் சபதம்

## பதினைந்தாம் அத்தியாயம்

## ''நமனை அஞ்சோம்!''

வேலனின் காதலி நீலமயில் ஒன்றை வளர்த்து வருகிறாள். அந்த மயிலைப் பார்க்கும்போதெல்லாம் அவளுக்கு முருகனுடைய நினைவு வருகிறது. காதலின் தாபம் அதிகமாகிறது. ஒரு நாள் மயிலைப் பார்த்துச் சொல்கிறாள் :- ''நீ பெருமான் முருகனுடைய வாகனமல்லவா? போ! போய் அவரை இங்கு விரைவில் அழைத்து வா!'' என்று கட்டளையிடுகிறாள். கட்டளையிடுவதுடன் நிற்காமல் மயிலை அடிப்பதாக பயமுறுத்தி விரட்டி விடுகிறாள்.

நீலமயில் விரைவில் திரும்பி வரும் என்று ம், வரும்போது தன்மீது வேலனை ஏற்றிக்கொண்டு ஆடிவருமென்றும் காதலி வழிபார்த்துக் கொண்டிருக்கிறாள். ஆனால் நெடுநேரம் காத்திருந்தும் மயிலையும் காணவில்லை; வேலனையும் காணவில்லை.

''வேலன் ஒருவேளை அடியோடு தன்னை மறந்து விட்டிருப்பாரோ?'' என்று ஒரு கணம் தோன்றுகிறது.

உடனே அந்த பழைய சம்பவம் ஞாபகத்துக்கு வருகிறது. கடைசித் தடவை வேலனை அவள் சந்தித்தபோது, ''என்னை மறந்துவிடக் கூடாது'' என்று தான் இரந்து கேட்டுக் கொண்டதும், அவர் தம் வேலின் மேல் ஆணையாக ''உன்னை ஒரு நாளும் மறக்க மாட்டேன்!'' என்று வாக்களித்ததும் நினைவுக்கு வருகின்றன. உடனே, ''இல்லை; அவர் ஒருநாளும் மறந்திருக்க மாட்டார். இந்த மயில்தான் தாமதம் செய்கிறது'' என்று தீர்மானித்துக் கொள்கிறாள்.

தன் மனக் கண்ணின் முன்னால் மயிலை உருவகப்படுத்தி நிறுத்திக் கொண்டு சொல்கிறாள் :-

''மறவேன் மறவேன் என்று
வேலின்மேல் ஆணையிட்ட
மன்னரும் மறப்பாரோ நீல மயிலே!''

என்று சிவகாமி பாடிக் கொண்டு அபிநயமும் பிடித்தபோது, சபையோரின் கண் முன்னாலிருந்து சிவகாமி மறைந்து விட்டாள். தமிழகத்தின் அதிதெய்வமான ஸ்ரீ சுப்ரமண்யர் கையில் வேலுடனே அவர்கள் கண் முன்னால் நின்றார். கருணையும் அன்பும் ததும்பிய கண்களினால் முருகப் பெருமான் தன்னிடம் காதல் கொண்ட பெண்ணை நோக்குவதையும், கையில் பிடித்த வேலின் மேல் ஆணை வைப்பதையும், 'உன்னை என்றும் மறவேன்!' என்று உறுதி கூறுவதையும் சபையோர் பிரத்தியட்சமாய்க் கண்டார்கள்.

அடுத்த கணத்தில் வேலனும் வேலும் மறைய, வேலனைப் பிரிந்த காதலியையும் நீல மயிலையும் சபையோர்கள் தங்கள் எதிரே பார்த்தார்கள். காதலியின் உயிர் வேலனைப் பிரிந்திருக்கும் ஆற்றாமை

யினால் உருகிக் கரைவதையும் அவர்கள் கண்டார்கள்.

''அன்பர் வரவுநோக்கி
இங்குநான் காத்திருக்க
அன்னநடை பயில்வாயோ
வன்ன மயிலே!''

என்னும் அடிக்குச் சிவகாமி அபிநயம் பிடித்தபோது, முதலிலே தன்னந் தனியான ஒரு பெண், கண்களில் அளவற்ற ஆசையுடனும் ஆர்வத்துடனும், முடிவில்லாமல் நீண்டு சென்ற வழியைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருப்பதைப் பார்த்தார்கள்.

பிறகு, அந்தப் பெண், அன்ன நடை பயிலும் வன்ன மயிலைப் பரிகசிப்பதற்காகத் தானும் அன்ன நடை நடந்து காட்டிய போது, சபையில் 'கலீர்' என்ற சிரிப்பு உண்டாயிற்று. அவ்விதமே, முருகன் தன்னை வாகனமாய்க் கொண்ட பெருமிதத்தினால் மயிலின் தலைக்கேறிய போதையைக் காட்டியபோதும், அதனால் மயில் பாதையை மறந்து திண்டாடிய பேதைத் தனத்தைக் குறிப்பிட்ட போதும் சபையில் ஒரே குதூகலமாயிருந்தது.

''ஒரு வேளை என்மேல் பழி தீர்த்துக் கொள்வதற்காக வழியில் வேணுமென்று படுத்து உறங்கி விட்டாயா?'' என்று மயிலைப் பார்த்துக் கேட்டுவிட்டு, அப்பேர்ப்பட்ட அநியாயத்தைச் செய்த மயிலை, ''என்னவோ, நீ எப்படியாவது சௌக்கியமாயிரு!'' என்று மனங்கசந்து ஆசீர்வதிப்பதற்கு அறிகுறியாக, ''வாழி நீ மயிலே!'' என்று வாழ்த்தி, அதற்குரிய பாவமும் காட்டியபோது, அந்தச் சபையில் ஏற்பட்ட ஆரவாரத்தைச் சொல்லி முடியாது.

மறுகணத்தில் காதலியின் உள்ளப்பாடு மாறுகிறது. ''தங்க மயிலே!'' என்று கொஞ்சி அழைத்து, இந்த மங்கை மீதிரங்க மாட்டாயா?'' என்று கெஞ்சுகிறாள். ''உனக்காகவும் தெரியாது; சொன்னாலும் நீ கேட்க மாட்டாய்! உன்னைக் குற்றம் சொல்லி என்ன பயன்? ஏ! வன் கண் மயிலே!'' என்று மயிலின் கொடுமையான கண்களின் சலனப் பார்வையைச் சிவகாமி காட்டியபோது, சபையோர் அதிசயத்தில் மூழ்கினார்கள்.

''உன்னை நொந்து பயனில்லை. உலகத்தில் யானைகள், குதிரைகள் என்பதாக எத்தனையோ நல்ல நல்ல பிராணிகள் இருக்க, உன்னைப்போய் வாகனமாய்ப் பிடித்தானே அவனையல்லவா நோக வேண்டும்?'' என்று பாட்டை முடிக்கும் போது, அதில் அடங்கியிருந்த சோகம், மனக் கசப்பு, பரிகாசம், நகைச்சுவை ஆகிய உள்ளப் பாடுகள் அவ்வளவையும் சேர்ந்தாற்போல் முகத்தில் காட்டிய சிவகாமியின் அற்புதக் கலைத்திறமை சபையோரைப் பரவசப்படுத்தியது.

ஆம்; மேற்கூறிய பாடலும் அபிநயமும் சபையில் எல்லோரையும் பரவசப் படுத்தத்தான் செய்தன - ஒரே ஒருவரைத் தவிர, அந்த ஒருவர் மகேந்திர பல்லவர் தான். அவர் முகத்தில் சிணுக்கம் காணப் பட்டது. வேலனிடம் காதலை வெளியிடும் வியாஜத்தில் சிவகாமி மாமல்லரிடம் தன்னுடைய மனம் ஈடுபட்டதையும் தெரிவிக்கிறாள் போலும். 'வேலின் மேல் ஆணையிட்ட மன்னர்' என்பதில், அடங்கிய சிலேடை மிகத் தெளிவாக மகேந்திரருக்கு விளங்கியது. 'தன்னிகரில்லாதான்' என்னும்போது சிவகாமி தம்மைப் பார்த்ததின் கருத்தையும் தெரிந்து கொண்டார். ஆகா! இந்த பெண்ணுக்குத்தான் என்ன தைரியம்! கம்மைத் தோத்திரம் செய்து அவளுடைய காரியத்தைச் சாதித்துக் கொள்ள எண்ணுகிறாள், போலும்! ஆகா! மகேந்திர பல்லவனுடைய இயல்பை இவள் இன்னும் அறிந்து கொள்ளவில்லை!

இவ்விதம் எண்ணமிட்ட சக்கரவர்த்தி, அருகிலிருந்த ஏவலாளனிடம் ஏதோ சொல்லி அனுப்பினார். அவன் போய் ஆயனர் காதோடு ஏதோ கூறினான். ஆயனர் சிவகாமியிடம், ''அம்மா! வாகீசப் பெருமானின் பதிகம் ஒன்றுபாடு!'' என்று கூறினார்.

ஏற்கெனவே, சக்கரவர்த்தியின் சிணுங்கிய முகத்திலிருந்து அவருடைய மனப்பாங்கைச் சிவகாமி ஒருவாறு தெரிந்து கொண்டிருந்தாள். அவர் சொல்லி அனுப்பிய செய்தியினால் அது ஊர்ஜிதமாயிற்று. அந்தக் கல் நெஞ்சரைத் தன்னுடைய கலையின் மூலம் இளகச் செய்து, அவருடைய ஆதரவைப் பெறலாம் என்று எண்ணிய தன்னுடைய பிசகை நினைக்க அவளுக்கு வெட்கமாயிருந்தது. அந்த வெட்கமே மறுகணம் கோபமாக மாறி அவள் உள்ளத்தில் கொந்தளித்தது. பின்வரும் பாடலை ஆரம்பித்தாள் :-

''நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்!....''

அதுவரையில் ஒரே ஆனந்தத்திலும் குதூகலத்திலும் ஆழ்ந்திருந்த அந்தச் சபையில் திடீரென்று ஒரு மாறுதல் உண்டாயிற்று. ஒரு கல்யாண வைபவத்தின்போது, எதிர்பாராத அபசகுனம் ஏதேனும் ஏற்பட்டால் எல்லாருடைய மனமும் முகமும் எப்படி மாறுமோ அப்படிப்பட்ட மாறுதல். 'இந்தப் பாட்டை இந்தச் சந்தர்ப்பத்தில்

ஏன் பாடவேண்டும்' என்று அத்தனை பேரும் எண்ணியதாக அவர்களுடைய முகக் குறியிலிருந்து தெரிந்தது.

மேற்படி பாடலின் சரித்திரம் அத்தகையதாகும். சமண சமயத்தைத் தழுவிய மருள் நீக்கியார்மீது பாடலிபுரத்துச் சமணர்கள் பற்பல குற்றங்களைச் சுமத்திக் காஞ்சிப் பல்லவ சக்கரவர்த்திக்கு விண்ணப்பம் செய்துகொள்ள, மகேந்திர பல்லவர் உண்மையை விசாரித்து உணரும் பொருட்டு அவரைக் காஞ்சிக்கு வரும்படி கட்டளை அனுப்பினார். கட்டளையைக் கொண்டு போன இராஜ தூதர்கள் அந்த மகா புருஷரைக் கொஞ்சம் அச்சுறுத்தினார்கள்.

''எனக்கு இறைவன், சிவபெருமான் தான்; உங்களுடைய அரசன் கட்டளையை நான் மதியேன்!'' என்று திருநாவுக்கரசர் கூறித் தூதர்களைத் திடுக்கிடச் செய்தார்.

''உம்மைச் சுண்ணாம்புக் காளவாயில் போடுவோம், யானையின் காலால் மிதிக்கச் செய்வோம்; கழுத்திலே கல்லைக் கட்டிக் கடலிலே போடுவோம்'' என்றெல்லாம் தூதர்கள் பயமுறுத்தினார்கள். அப்போது, மருள்நீக்கியார் ஒரு பாடலைப் பாடினார் :-

**நாமார்க்குங் குடியல்லோம்**
**நமனை யஞ்சோம்**
**நரகத்தி லிடர்ப்படோம்**
**நடலை யில்லோம்**
**ஏமாப்போம் பிணியறியோம்**
**பணிவோ மல்லோம்**
**இன்பமே எந்நாளுந்**
**துன்பமில்லை!**
**தாமார்க்குங் குடியல்லாத்**
**தன்மை யான**
**சங்கரனற் சங்கவெண்**
**குழையோர் காதில்**
**கோமாற்கே நாமென்று**
**மீளா வாளாய்க்**
**கொய்ம்மலர்ச்சே வடியிணையே**
**குறுகினோமே!**

மேற்கண்ட பாடலை ஓலையிலே எழுதுவித்து, ''இதை எடுத்துக்கொண்டு போய் உங்கள் அரசரிடம் கொடுங்கள்'' என்றார் சிவனடியார். தூதர்களும் தங்களுக்கு வேறு கட்டளையில்லாமையால் திரும்பிச் சென்று பாடலைச் சக்கரவர்த்தியிடம் கொடுத்தார்கள். அவர்கள் எதிர்பார்த்ததற்கு மாறாகக் காரியம் நடந்தது. அதாவது பாடலைப் படித்த மகேந்திர பல்லவர் அத்தகைய தெய்வப் பாடலைப் பாடக் கூடிய மகானைத் தரிசிக்க விரும்பினார். அவரைத் தரிசித்த பிறகு, தாமும் ஜைன மதத்தைவிட்டுச் சைவ சமயத்தைச் சேர்ந்தார்.

இதெல்லாம் தெரிந்தவர்களான படியாலேதான் சபையோர் அத்தகைய அஸ்வாரஸ்யத்தைக் காட்டினார்கள்.

ஆனால், சபையோருடைய மனோபாவத்துக்கு நேர்மாறாக இருந்தது மகேந்திர பல்லவருடைய மனோபாவம். அந்தப் பாடல் அவருக்கு மிகுந்த உற்சாகத்தை அளித்ததாகத் தெரிந்தது. பாடல் ஆரம்பித்த உடனே, அது எந்தச் சந்தர்ப்பத்தில் பாடப்பட்டதென்பதை மகேந்திரர் புலிகேசிக்கு அறிவித்தார். புலிகேசிக்கு அது எல்லையற்ற வியப்பையும் உவகையையும் அளித்ததாகத் தெரிந்தது. ''அழகுதான்! தங்களுடைய அதிகாரத்தை மறுதலித்து ஒரு பரதேசி பாடல் பாடுவது; அதை ஒரு பெண், சபை நடுவில் நின்று அபிநயம் பிடிப்பது; அதை நீங்களும் பார்த்துச் சந்தோஷப்படுவது; இதையெல்லாம் என்னால் நம்பவே முடியவில்லையே!'' என்றார் வாதாபிச் சக்கரவர்த்தி.

''அதுதான் கலையின் மகிமை, சத்யாச்ரயா! ஒருவன் வாய்ப் பேச்சாக என் ஆக்ஞையை மறுத்திருந்தால், உடனே அவனைச் சிரச்சேதம் செய்யும்படி கட்டளையிட்டிருப்பேன். அது தேவ செந்தமிழ்க் கவிதையாக வந்தபோது, 'இத்தகைய அற்புதக் கவிதையைப் பாடியவரைப் பார்க்க வேண்டும்' என்ற விருப்பம் எனக்கு உண்டாகிவிட்டது'' என்றார் ரஸிக சிகாமணியான காஞ்சிச் சக்கரவர்த்தி.

இதற்குள்ளாகப் பாடல் ஒரு தடவை பாடி முடிந்து, அபிநயமும் ஆரம்பமாகியிருந்தது. 'நமனை அஞ்சோம்' என்னும் பகுதிக்குச் சிவகாமி அபிநயம் பிடிக்கத் தொடங்கியிருந்தாள். மார்க்கண்டனுடைய கதை சபையோரின் கண்முன்னால் வந்தது.

மல்லிகைப் பூவின் மெல்லிய இதழ் போன்ற மிருதுவான சரீரத்தையுடைய அந்த யுவதி ஒரு கணத்தில் கையிலே தண்டாயுதத்துடனும் பாசக் கயிற்றுடனும் கண்டவர்கள் உயிர்க் குலையும் பயங்கரத் தோற்றத்துடன் வரும் யமதர்மராஜனாக மாறுகிறாள்! அடுத்த கணத்தில் அவளே பதினாறு வயதுள்ள இளம் பாலகனாக மாறி, முகத்தில் சொல்ல முடியாத பீதியுடன், சிவலிங்கத்தை அணைத்து ஆலிங்கனம் செய்து கொள்ளுகிறாள்.

மறுகணத்தில் யமதர்மராஜன் தன் பாசக் கயிற்றை வீசி எறிந்து மார்க்கண்டனுடைய உயிரை வலிந்து கவரப் பார்க்கிறான். அந்த இளம் பிள்ளையின் முகமோ முன்னைக் காட்டிலும் பதின்மடங்கு பீதியையும் பரிதாபத்தையும் காட்டுகிறது.

ஆஹா! அடுத்தகணத்தில் அந்தச் சிவலிங்கத்திலிருந்து சம்ஹார ருத்ரமூர்த்தி கிளம்புகிறார்! சிவகாமியின் நெடிதுயர்ந்த ஆகிருதி இப்போது இன்னும் உயர்ந்து தோற்றமளிக்கிறது. ஒரு கணம் கருணை ததும்பிய கண்கள் சற்று கீழ்நோக்கிப் பார்க்கின்றன. கரங்கள், பாலன் மார்க்கண்டனுக்கு அபாயம் அளிக்கின்றன. மறுகணத்

தில் கண்கள் எதிர்ப்புறம் நோக்குகின்றன. யமனைக் கோபத்துடனே பார்க்கும் கண்களில் அக்னி ஜுவாலை தழல் விடுகிறது. புருவங்களுக்கு மத்தியிலே நெற்றிக் கண் இதோ திறந்துவிடப்போகிறது என்று நினைக்கும்படியாக ஒரு துடிதுடிப்புக் காணப்படுகிறது.

கோர பயங்கர உருவங் கொண்ட யம தர்மனிடம் இப்போது சிறிது பணிவைக் காண்கிறோம். ''என் பேரில் ஏன் கோபம்? என்னுடைய கடமையைத்தானே செய்கிறேன்?'' என்று சொல்லும் தோற்றம். கோபம் கொண்ட சம்ஹார ருத்ரமூர்த்தி மீண்டும் சபையோருக்குத் தரிசனம் தருகிறார். ஒரு காலைத் தூக்கி ஓங்கி உதைக்கிறார். 'தடார்' என்ற சத்தத்துடன் யமன் உதைபட்டுக் கீழே விழுகிறான்.

மீண்டும், பாலன் மார்க்கண்டனின் பால் வடியும் முகம். ஆகா! அந்த முகத்தில் இப்போது பயம் இல்லை, பீதி இல்லை! பக்திப் பரவசமும் நன்றியும் ததும்புகின்றன.

அபிநயம் ஆரம்பித்தவுடனேயே சபையோர் தங்களுடைய பழைய விரஸ உணர்ச்சியை மறந்துவிட்டார்கள். பாட்டு யார் பாடியது; எந்தச் சந்தர்ப்பத்தில் பாடியது என்பதெல்லாம் அவர்களுக்கு அடியோடு மறந்துபோய்விட்டது. வெளியுலகத்தை மறந்து, தங்களையும் அடியோடு மறந்துவிட்டார்கள்.

பாடல் முழுவதும் முடிந்து, பூலோகத்திற்கு வந்தவுடனே ''எப்படி?'' என்று மகேந்திர பல்லவர் புலிகேசியைக் கேட்டார்.

''நாகநந்தி எழுதியது உண்மைதான்!'' என்று வாதாபி மன்னர் சொல்லிவிட்டு மகேந்திர பல்லவரை உற்று நோக்கினார். மகேந்திரரின் முகத்தில் எவ்வித மாறுதலும் காணப்படவில்லை.

''நாகநந்தி யார்?'' என்று சாவதானமாக மகேந்திரர் கேட்டார்.

''நீங்கள் நாகநந்தி பெயரைக் கேள்விப்பட்டதே இல்லையா? தென்னாடெங்கும் பலநாள் யாத்திரை செய்த புத்த பிக்ஷு.''

''பிக்ஷு என்ன எழுதியிருந்தார் தங்களுக்கு?''

''அவருடைய யாத்திரை விவரங்களை எனக்கு அவ்வப்போது தெரிவிக்கும்படி கேட்டிருந்தேன். அந்தப்படியே எழுதிக் கொண்டு வந்தார். 'ஆயனரைப்போன்ற மகா சிற்பியும் சிவகாமியைப் போன்ற நடன கலா ராணியும் இந்தப் பரத கண்டத்தில் வேறு எங்கும் இல்லை!' என்று ஒரு தடவை எழுதியிருந்தார்.''

''நாகநந்தி பிக்ஷு நல்ல ரசிகர் போலிருக்கிறது. அவர் இப்போது எங்கேயோ?''

''அதுதான் தெரியவில்லை. ஒருவேளை உங்களுக்குத் தெரிந்திருக்கலாமென்று நினைத்தேன்.''

மகேந்திரர் மௌனமாயிருந்தார்.

''நாட்டில் இருந்த புத்தபிக்ஷுக்களையெல்லாம் ஒற்றர்கள் என்று நீங்கள் பிடித்துச் சிறைப்படுத்தியதாகக் கேள்விப்பட்டேன். ஒருவேளை நாகநந்தி பிக்ஷுவையும் ஒற்றர் என்று சந்தேகித்துச் சிறைப்படுத்தி விட்டீர்களோ, என்னவோ?''

மேற்குறித்த சம்பாஷணை நடந்து கொண்டிருக்கையில், சி வ கா மி யி ன் கண்கள் கரகோஷம் செய்து ஆரவாரித்துக் கொண்டிருந்த சபையோரின் மலர்ந்த முகங்களைப் பார்த்த வண்ணம் சுற்றிக் கொண்டு வந்து, மகேந்திர பல்லவரின் உற்சாகம் ததும்பும் முகத்தைப் பார்த்து விட்டு, அடுத்தாற்போல் வாதாபிச் சக்கரவர்த்தியின் கிளர்ச்சி கொண்ட முகத்தில் வந்து நின்றன.

அவ்விதம் நின்றதும் சிவகாமியின் உள்ளத்தில் இத்தனை நேரமும் படர்ந்து வேதனை செய்து கொண்டிருந்த மாயத் திரை பனிச்சென்று விலகிற்று. நிழலாயிருந்த ஞாபகம் தெளிந்த உருவெடுத்து மனக்கண் முன்னால் நின்றது. ஆ அந்த முகம்! அப்படியும் இருக்க முடியுமா? இரு மனிதருக்குள் அத்தகைய முக ஒற்றுமை சாத்தியமா? அல்லது இருவரும் ஒருவர்தானா? மகேந்திர சக்கரவர்த்தி பல வித மாறுவேஷங்கள் போட்டுக் கொண்டு திரிவதுண்டு அல்லவா? அதுபோலவே, வாதாபிச் சக்கரவர்த்தியும் நாகநந்தி பிக்ஷுவாகத் தென்னாட்டில் உலவிக் கொண்டிருந்தாரா?

இத்தகைய எண்ணங்களினால் சிவகாமியின் உள்ளம் குழம்பிக் கொண்டிருக்கும்போதே, மகேந்திர பல்லவர் நடனத்தை முடித்து விடலாம் என்று ஆயனருக்குச் சமிக்ஞை செய்தார்.

நடனக் கலையின் அதி தெய்வமும் தமிழ் நாட்டின் தனிப் பெருந்தெய்வமுமான ஸ்ரீ நடராஜமூர்த்தி தில்லைப் பதியில் ஆடிய ஆனந்த நடனத்தை வர்ணிக்கும் பாடலோடும், அதற்குரிய நடன அபிநயத்துடனும் அன்றைய நடன விநிகை முடி



''என்னங்க, நம்ம பெண்ணைப் பார்த்து விட்டுப் புறப்படும் போது மாப்பிள்ளை வீட்டார் உங்களிடம் ஒரு ரூபாய் வாங்கிப் போனாங்களே எதுக்கு?''

''போய் 'கவர்' வாங்கி நமக்கு எழுதிப் போடவாம்!''

- நல்லாலம் காசிதாசன்

வுற்றது.

''இம்மாதிரி ஒரு நடனம் இதற்கு முன்னால் நடந்ததில்லை; இனிமேலும் நடக்கப் போவதில்லை!'' என்று அம் மகா சபையில் கூடியிருந்த ரஸிகர்கள் ஏகமன தாக அபிப்பிராயப்பட்டார்கள்.

மகேந்திர பல்லவர் மீண்டும் சமிக்ஞை செய்ததின் பேரில் ஆயனரும் சிவகாமியும் இரு சக்கரவர்த்திகளும் அமர்ந் திருந்த சிம்மாசனங்களுக்கு அருகே சென்று வணங்கி நின்றார்கள். மகேந்திர பல்லவர், ''ஆயனரே! முன் தடவை இதே இடத்தில் சிவகாமியின் அரங்கேற்றம் நடந்து கொண் டிருந்த போது, இடையிலே தடைப்பட்ட தல்லவா? அந்தத் தடைக்குக் காரணமான வாதாபிச் சக்கரவர்த்தியே இங்கு இன்று வீற்றிருந்து உமது குமாரியின் அற்புத நட னத்தைப் பார்த்துக் களித்தார்!'' என்று கூறி விட்டுச் சிவகாமியைப் பார்த்து, ''அம்மா, சிவகாமி! வாதாபிச் சக்கரவர்த்தி உன்னு டைய நடனக் கலைத்திறமையில் ஒரேயடி யாக மயங்கிப் போய்விட்டார். உன்னை யும் உன் தகப்பனாரையும் தம்முடன் வாதா பிக்கு அனுப்பி வைக்கும்படி கேட்கிறார். உனக்குப் போகச் சம்மதமா?'' என்று வினவினார்.

சிவகாமி கோபத்தினால் தன்னடக் கத்தை இழந்து, ''பிரபு இந்த ஏழைப் பெண் இந்தத் தேசத்தில் இருப்பதே தங்களுக்குப் பிடிக்கவில்லையா?'' என்றாள்.

இம்மொழிகள் ஆயனருக்கும் இன் னும் பக்கத்தில் நின்றவர்களுக்கும் வியப் பையும் பயத்தையும் அளித்தன. ஆனால் மகேந்திர பல்லவரின் முகத்தில் மட்டும் புன்னகைதான் தவழ்ந்தது. அவர் வாதாபிச் சக்கரவர்த்தியைப் பார்த்து, ''சத்யாச்ரயா! பார்த்தீர்களா? சாட்டையினால் அடித்து நடனம் ஆடச் சொல்லும் நாட்டுக்குக் கலை ஞர்கள் போக விரும்புவார்களா?'' என் றார்.

அப்போது புலிகேசியின் முகம் கறுத்த தையும், அவருடைய கண்களில் கனல் எழுந்ததையும் கவனியாமல், மகேந்திரர் ''அம்மா சிவகாமி! உன்னை நாட்டை விட்டுத் துரத்த நான் விரும்பவில்லை. இந்த நகரத்தை விட்டு உங்களைப் போகச் சொல்லவே எனக்கு இஷ்டமில்லை. ஆய னரே! இன்று இவ்வளவு அற்புதமாக நடனம் ஆடிய சிவகாமிக்கு நான் பரிசுகள் கொடுக்க வேண்டும். அதுவரை சில தினங்கள் நீங்கள் நகரிலேயே இருக்க வேண்டும். கமலியின் வீட்டில் போயிருங்கள். கமலியும் சிவகாமியைப் பார்க்க ஆவலாயிருக்கிறாள். பின்னர் அங்கு நான் வந்து உங்களுடன் சாவகாச மாகப் பேசுகிறேன்!'' என்றார்.

(தொடரும்)

## அருள்வாக்கு

நம் கோபம் எதிராளியை மாற்றாது. அவனுக்கும் நம்மிடம் கோபத்தை உண் டாக்குவதுதான் அதன் பலன். இரண்டு பக்கங் களிலும் துவேஷம் வளர்ந்து கொண்டே போகும். ஒருத்தன் தன் தப்பைத் தானே உணர்ந்து திருந்தச் செய்யாமல், நம் கோபத் துக்குப் பயந்து சரியாக நடந்து காட்டுவதில் நமக்குப் பெருமையில்லை. இது நிலைத்தும் நிற்காது. அன்பினாலேயே பிறரை மாற்று வதுதான் நமக்குப் பெருமை; அதுதான் நிலைத்து நிற்கும்.



ஒருத்தன் பாபம் செய்ய அவனுடைய மனசு, சந்தர்ப்பம் இரண்டும் காரணமாகின்றன. நாம் பல பாபங்களைச் செய்ய முடியாமல் சந்தர்ப்பமே நம்மைக் கட்டிப் போட்டிருக்கலாம். எனவே, ஒரு பாபியைப் பார்க்கும் போது, ''அம்பிகே! இந்தப் பாபத்தை நானும் கூடச் செய்திருக்கலாம். ஆனால் அதற்குச் சந்தர்ப்பம் தராமல் நீ கிருபை செய்தாய். அந்தக் கிருபையை இவ னுக்கும் செய்யம்மா'', என்று பிரார்த்திக்க வேண்டும்.

இரண்டாவதாக, நம்மை ஒருத்தர் துவே ஷிக்கிறார் என்றும் கோபம் கொள்ள வேண் டியதில்லை. நாம் எத்தனை தூஷணைக்குத் தக்கவர் என்பது நம் உள் மனசுக்குத் தெரி யும். ஒருக்கால் நம்மைத் தூஷிக்கிறவர் நாம் செய்யாத தவறுக்காக நம்மைத் திட்டிக் கொண்டிருக்கலாம். ஆனால் நாம் செய்த தவறுகள் அதைவிடப் பெரியவை என்று நம் அந்தரங்கத்துக்குத் தெரியும். நம் தவறுகளைக் கழுவிக் கொள்வதற்காக ஒவ்வொரு நாளும் அம்பாளிடம் பச்சாதாபத்துடன் அழவேண் டிய நிலையில்தான் இருக்கிறோம். இந்த நிலையில் உள்ள நாம் பிறரைத் தப்புக் கண்டு பிடித்துக் கோபிக்க நியாயம் ஏது?

நாம் தப்பே செய்யவில்லை என்றால், அப்போது பிறரைக் கோபிக்கலாமா என்றால், இப்படித் தப்பே பண்ணாத நிலையில், நாம் அன்புமயமாகி விடுவோம். அப்போது நமக் குப் பாவியிடமும் கருணை தவிர வேறு எந்த பாவனையும் இராது. கோபமே உண்டாகாது.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச சாரிய சுவாமிகள்.

# வசந்தகால பறவை

அவனும் அவளும் காதலிக்கிறார்கள். முரட்டு அண்ணனின் எதிர்ப்பு. சாகசம் செய்து தப்பித்து, நகரம். நண்பர்கள், புதிய மனிதர்களின் உதவி. எளிய வாழ்க்கை. நிறைவு. நிம்மதிக்குக் குறுக்கே பண பலம் மிக்க வலுக் கரங்கள். பிரச்னைகள். காதலர் வெற்றி. இப்படி வெகு சாதாரணக் காதல் கதை.

புதுமுகம் ஷாலி, காமிராவின் தூரத்துப் பார்வையில் வெகு அழகு. மிட் ஷாட்டில் வெகுவைத் தவிர்த்த அதே வார்த்தை. க்ளோசப்பில் நான்கு அழகான பெண்களில் ஒருவர் போன்ற அழகு. ஆனாலும் அவரின் நிறமும், பரபரப்பும் தடுமாற்றமில்லாத நடிப்பும் எஸ். பி. பாலசுப்பிரமணியம் குரலில் ''பரவாயில்லையே!'' - என்று சொல்ல வைக்கிறது.

படத்தின் முக்கிய மற்றொரு வசீகரம், பாடல்கள். ஆங்காங்கே 'சாயல்கள்' இருந்தாலும் உற்சாக இசை : குட், பாக உந்தி, சென்னாய் குது, வல்லியம், அச்சா!

பூங்கொத்துத் தர வேண்டிய படப்பிடிப்பு.

புரொபஸர் போல வந்து பாடம் நடத்தி, வசூல் செய்வதில் காண்பிக்கும் சுறுசுறுப்பில், புல்வெளியில் ஷாலியுடன் குழந்தைத்தனமாய் 'பச்சக், பச்சக்' வசனம் பேசுவதில், காதலுக்காக லட்சக்கணக்கான உதை வாங்குவதில், மழையில் ஒரு கோஷ்டியே முயன்றும், பிரிக்க முடியாத நெருக்கத்தில் என்று ஜமாய்க்கிறார், ரமேஷ் அரவிந்த்.

கவுண்டமணி தன் வழக்க வகை அதிகப்பிரசங்கித்தனத்துடன், தேவைக் கதிகமாகவே தோன்றி ஆக்கிரமிக்கிறார். இவரின் தகிடுதத்தங்களை ரசிக்க முடிகிறது. ஆனால் 'சொட்டய்' வசனத்தை வெறுக்கத்தான் முடிகிறது.

இப்படி வெகு சாதாரணக் காதல் கதையிலும் இளமையை, குறும்புத்தனமான வசனத்துடன் ஐஸ்க்ரீம் போல அள்ளித் தந்திருக்கிறார்கள். அரிசியில் கல் இருக்கும். ஐஸ்க்ரீமில் இருக்குமா? கிறது. இறுதிக் காட்சி : கோர்ட்டில் அந்தப் புகார் வசனம், ஏற்க முடியாத ஒன்று. எனவே பாராட்டுக்களில், கடைசி காட்சிக்கான அபராதத்தைக் கழித்துக் கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது.



- சுந்தர்ஜி

ஸிக்ஸ்-டு-ஸிக்ஸ்.
உங்கள் குழந்தையின்
தோற்றம் அழகுடன்
விளங்கிட மகத்தான
புதிய வழி



உங்கள் குழந்தையின் உடலில் புள்ளிப்புள்ளியாக கொசுக்கடி இருந்தால் அந்த நாளை சந்தோஷமாக துவக்க முடியாது.

இனி இதற்காக கவலைப்படத் தேவையில்லை.

உங்களுக்கெனவே, ஸிக்ஸ்-டு-ஸிக்ஸ் கொசு விரட்டி கொசுக்களை அடக்கிடும் ஆற்றல் மிக்க ஆயுதம் இதுவே.

ஸிக்ஸ்-டு-ஸிக்ஸ் சீரான உஷ்ணநிலையில் இயங்குகிறது மேட் சில்லுகள் ஆவியாகி காற்றுடன் நன்கு கலப்பதை இது உறுதி செய்கிறது. தவிர இரவு முழுவதும் கொசுக் கடியிலிருந்து பாதுகாப்பு அளிக்கிறது.

ஸிக்ஸ்-டு-ஸிக்ஸ் மேட் சில்லுகளில், உடலின் ஆற்றல் மிக்க கொசு ஒழிப்பு மருந்துப் பொருள் d-அல்லெத்ரின் அடங்கியுள்ளது. கொசுக்கள் இருக்கும் இடம் தெரியாமல் ஓட இதுவும் காரணமாகும்.

தவிர இதை உங்களுக்கு வழங்குவோர், இரசாயன மருந்துகள் மற்றும் பூச்சிக்கொல்லி தயாரிப்பு துறையிலே பிரபலமானவர்களாகிய நோசில் ஆவர்.

உங்கள் குழந்தையின் மேனியை மாசு மறுவின்றி வைத்திட இதைவிட மகத்தான வழி இருக்க முடியுமா?

**இரவில் இல்லை, கொசுக்களின் தொல்லை.**







Enterprise NC 39/Tm A



☛ சி. ச. ராய் - கணக்குக் காட்டு!

கல்கத்தா கடிதம் :

# 68 லட்ச ரூபாய் என்னவாயிற்று?



☛ மூப்பனார் - சமாதானத் தூது...



☛ சௌத்ரி - பதில் அறிக்கை

வங்காளத்திலுள்ள இ. காங்கிரஸ்காரர்களின் பொழுது போக்கே உட்கட்சிப் பூசல்தான். இவர்களின் உட்கட்சிப் பூசலுக்கு ஒரு சரித்திரப் பின்னணியே உண்டு. முன்பு, தேச பந்து - சுபாஷ் கோஷ்டிக்கும் ஜே. எம். சென்குப்தா கோஷ்டிக்கும் இடையிலான மோதல்கள் வரலாற்றில் இடம் பெற்ற சமாசாரமாயிற்றே! இப்போது மட்டும் சும்மா இருந்து விட முடியுமா?

இப்போதைய மாநில இ. காங்கிரஸ் தலைவர் சித்தார்த்த சங்கர் ராயிக்கும் முன்னாள் தலைவர் கனிகான் சௌத்ரிக்கும் இடையில் நடந்து கொண்டிருக்கும் மோதல், தமிழ் நாட்டிலுள்ள வாழப்பாடியார் - மூப்பனார் கோஷ்டி மோதலையெல்லாம் தூக்கிச் சாப்பிடுகிற மோதல்!

தாம் தலைவராவதற்கு முன்பு காங்கிரஸ் கட்சியில் உறுப்பினர்களைச் சேர்த்த வகையில் கிடைத்த அறுபத்தெட்டு லட்ச ரூபாய்க்குக் கணக்கே வரவில்லையென்று அண்மையில் சித்தார்த்த சங்கர் ராய் ஓர் அறிக்கை வெளியிட்டார்.

கனிகான் கோஷ்டி சும்மா இருக்குமா? சோமேன் மித்ராவும் பிரதீப்பட்டாச்சாரியாவும் ராயைத் தாக்கிப் பதில் அறிக்கை வெளியிட்டார்கள். அந்தப் பணத்தையெல்லாம் டெல்லி 'மேலிடத்தில்' சேர்த்து விட்டதாகச் சொன்னார்கள்.

ஆயினும் மோதல் நின்றபாடில்லை என்பதால், மேலிடம், சமாதானத் தூதுவராக மூப்பனாரைக் கல்கத்தாவுக்கு அனுப்பி வைத்தது. இரண்டு கோஷ்டிகளின் அனல் பறக்கும் அறிக்கைகளின் அடிப்படையில், தாம் கல்கத்தா போய்ச் சேர்ந்ததும் ஏக கலாட்டா நடக்கும் என்றுதான் மூப்பனார் எதிர்பார்த்திருந்தார். அப்படி எதுவுமே நடக்காமல் அனைவரும் கப்சிப் என்று வாயை மூடிக் கொண்டார்கள்!

எது எப்படியானாலும், அந்த அறுபத்தெட்டு லட்ச ரூபாய் என்னவாயிற்று? இந்தக் கேள்விக்கு கனிகான் கோஷ்டி மட்டுமல்ல; டெல்லி மேலிடம் கூட இது வரை வாயைத் திறக்கவேயில்லை!

## நல்லவேளை, தப்பினோம்!

ஷாவாலஸ் நிறுவனம் உற்பத்தி செய்யும் பொருள்களில் மிகவும் முக்கியமானது மதுபானம். டன்லப் நிறுவனத்தில் டயர். சில ஆண்டுகளுக்கு முன்பு இந்த இரண்டு நிறுவனங்களையும் தம்வசமாக்கிக் கொண்ட எம். ஆர். சாப்ரியா அண்மையில் பத்திரிகை நிருபர்களிடம் பேசினார் : ''வாலஸ் நிறுவனம் என் கைக்கு வந்ததும் நான் மது அருந்துவதை விட்டு விட்டேன். அதே போல் டன்லப் நிறுவனம் வந்த பிறகு நான் காரில் போவதை விட நடந்து போவதையே அதிகம் விரும்புகிறேன்!''

பத்திரிகையாளர்கள் தங்களுக்குள் அடித்துக் கொண்ட கமெண்ட் : ''நல்ல வேளை, சாப்ரியா துணி மில் எதையும் இன்னும் வாங்கவில்லை!''

- எஸ். கே. எம்.

# 13

முதலில் மனோஜுக்கு ஷண்பேகரின் மேல் ஆத்திரம் வந்தது. பெண்ணை எங்கேயோ அழைத்துச் சென்றிருக்கிறான். இருக்கிற சிக்கல் போதாது என்று இது வேறு. அந்தப் பெண் பண்டிதருக்கு என்ன உறவு என்று சரியாகப் புரியவில்லை. ஷண்பேகரிடம் பாஷை தெரியாத பெண்களைக் கூட ஆகர்ஷிக்கும் திறமை இருப்பதைப் பற்றிப் பொறாமைப் பட்டான்.

''ரெண்டு பேரும் சினிமாப் பாத்துக்கிட்டு இருந்தாங்க. எங்க திடீர்னு காணாமப் போய்ட்டாங்க?'' என்று பண்டிதர் கேட்க, ப்ரமிளா, ''உன் ஃப்ரண்டு'' என்றான்.



# கம்ப்யூட்டர் கிராமம்

''இந்த இருட்டில் எங்கேபோயிருப்பான்?''

''சைட்டுக்குப் போயிருப்பாங்களோ?'' என்றார் பண்டிதர்.

''இருக்காதுங்க.''

''விளக்கு எரியுது.''

தூரத்தில் சைட் அருகில் விளக்கு எரிந்தது. ஜெனரேட்டர் சப்தம் மெலிசாகக் கேட்டது.

''இந்த வேளையில் போய்....'' என்பதற்குள் டிஸி, ''வாங்க போய்ப் பார்த்துரலாம். அங்க இந்தப் பொம்பளை இல்லைன்னா விபரீதம்.''

''இருந்தாலும் விபரீதம்தான்'' என்றான் மனோஜ் மெல்ல.

எல்லோரும் ஜீப்பில் ஏறிக்கொண்டு சைட்டுக்குப் போன போது, இங்கிருந்தே மனோஜ் ஹாரன் அடித்தான். எச்சரிக்கையாக இருக்கட்டுமே! அவர்கள் இருவரையும் சந்தேகத்துக்கிடமான நிலையில் பார்க்க விரும்பவில்லை.

சைட்டில் விளக்கு முன்னறையில் எரிந்து கொண்டிருக்க, உள்ளே கம்ப்யூட்டர் விசைப்பலகையின் எழுத்துக்களை ஒத்தும் சின்னச் சின்ன சப்தங்கள் கேட்டன. ''ஷண்'' என்று கேட்டுக்கொண்டே உள்ளே நுழைந்தான்.

''யா!''

''என்ன செய்கிறாய்?''

''சினிமா புரியவில்லை. கம்ப்யூட்டரில் பாக்கி இருக்கும் வேலையைச் செய்ய வந்துவிட்டேன், சிஸ்டம் செக் பண்ண!''

''அந்தப் பெண் எங்கே?''

''எந்தப் பெண்?''

''செல்வி.''

''உங்களுடன் வரவில்லை?''

''இல்லை.''

''என்பக்கத்தில்தான் சினிமாவில் உட்கார்ந்திருந்தாள். அவளை ப்ரமிளாவின் பக்கத்தில் உட்கார அனுப்பிவிட்டேனே... ப்ரமிளா, உன்னிடம் வரவில்லை?''

''இல்லை.''

''செல்வி எங்கே?''

''ஒருவேளை தலைவலி என வீட்டுக்குப் போயிருக்கலாமோ?''

''ஷண், உன்னுடன் செல்வி வரவில்லையா? நிச்சயமாகச் சொல்.''

''நிச்சயம் சொல்வேன். எனக்கு என்ன பயம்? அழைத்து வந்தால் அழைத்து வந்தேன் என்று சொல்கிறேன். நான் இங்கே வந்தது தனியாக. கம்ப்யூட்டரை கவனிப்பதற்காக!''

''சரிதான்.''



''நான் போயி வீட்டில பார்த்துட்டுத் தகவல் சொல்றேங்க; ஏதாவது விபரீதமா ஆயிரப் போவுது'' என்றார் பண்டிதர்.

அவர்கள் சைட்டை விட்டு விலகும் போது, முனீஸ்வரன் மரத்துக்கு அருகில், நிறுத்தி, டிஎஸியின் டார்ச் விளக்கு வெளிச் சத்தில் மரத்தருகே பார்த்தார்கள்.

செல்வி அங்கே மரத்தில் தொங்கிக் கொண்டிருந்தாள். தலை கலைந்திருந்தது. நெற்றியில் குங்குமம் அப்பியிருந்தது.

''செல்வி'' என்று யாரோ அபகரமாகக் கூக்குரலிட, அவள் உடல் காற்றில் லேசாக அசைய, தலை சாய்வாகத் தொங்கியது. கை விரல்கள் உள்வாங்கியிருந்தன.

''செல்வி, என்னம்மா ஆச்சு ஒனக்கு? அய்யோ....'' என்று பண்டிதர் அலற

''முனீஸ்வரன் முனீஸ்வரன்....''

''அய்யோ என்ன விபரீதம்'' என்றார் நடேச பண்டிதர்.

டிஎஸி மனோஜிடம், ''சீக்கிரம் போய் போலீஸ் ஸ்டேஷன்ல கான்ஸ்டபிளை எழுப்பி வாங்க. ப்ரமிளாவையும் கூட்டிப் போயிருங்க,'' என்றார்.

ப்ரமிளா சரியாகப் பார்க்காமல், ''செல்விக்கு என்னாச்சு?'' என்றாள்.

டிஎஸியின் மனைவி பயத்தில் கூக்குர லிட்டு மறுபடி ''முனீஸ்வரன் முனீஸ் வரன்'' என்றாள்.

''ஷண்பேகர்'' என்று அதட்டி அழுத்த மாகக் கூப்பிட்டான் மனோஜ். அவன் அங்கேயிருந்து - விளக்கு வெளிச்சத்தில் விளிம்பாகத் தெரிந்து, ''வாட் இஸ் இட்?'' என்றான்.

''தி கேர்ள் இஸ் டெட்'' என்று இரைச்ச லாகச் சொன்னான் மனோஜ்.

''வாட்?''

அவன் அருகே ஓடி வர, அப்போது நடேச பண்டிதர் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, செல்வியை மரத்திலிருந்து இறக்க முயற்சி செய்தார். மனோஜ் மரத்தை டார்ச் வெளிச்சத்தில் பார்த்தான். வேரடி யில் ரத்தமா, குங்குமமா தெரியவில்லை. அகல் விளக்கு பொந்துக்குள் எரிந்து கொண்டிருந்தது. மனோஜுக்கு உடம்பெல் லாம் மயிர்க்கால்கள் நின்றன.

''ஷி இஸ் கான்! மர்கயா'' என்றான் ஷண்பேகர்.

ப்ரமிளா 'உறிஸ்டரிக்கல்' ஆகிவிட் டாள். அவள் பயத்தில் பேச்சுக் குளறி ''பம்பாய் பம்பாய்'' என்று ஸ்மரித்துக் கொண்டிருந்தாள்.

**சுஜாதா**

டிஸியின் மனைவி ஜீப்பில் உட்கார்ந்து விட்டாள்.

நடசே பண்டிதரும் ஷண்பேகரும்தான் இறக்கினார்கள்.

''போலீஸ் வரட்டும்யா.''

''உயிரு இருக்கப் போவுதுங்க.''

''அவர் செய்ததுதான்'' என்றாள் டிஸியின் மனைவி.

''யாரு?''

''முனீஸ்வரன்தான்.''

''சும்மாரு'' என்றார் டிஸி.

''வரவர முனீஸ்வரர் பயங்கரம் சாஸ்தியாயிக்கிட்டு இருக்குது....'' என்றார் பண்டிதர். ''முதல்ல என்னவோ புரளின்னுதான் நினைச்சேங்க. ஆனா இப்ப இந்த பொண்ணுக்கு ஆனதைப் பார்த்தா.... சொந்தத் தங்கச்சி மாதிரி வளத்தேனே, செல்வி செல்வி என்ன ஆச்சுது உனக்கு? முனீஸ்வரா எதுக்காக இந்த தண்டனை? என்ன குற்றம் செய்தா இவ? அய்யய்.... அய்யோ!'' என்று குரல் நடுங்க வாய்விட்டு அழுதார் பண்டிதர்.

பின்னிரவு இரண்டு மணியாகியும் யாரும் வராமற் போகவே, மனோஜ் சாலையில் நடக்க ஆரம்பித்தான். ஷண்பேகரும் கூட வருவதாகச் சொன்னான். நடேச பண்டிதரை உடலுடன் காவல் இருக்கச் சொல்லி விட்டு, பெண்களை ஜீப்பில் அனுப்பி விட்டார்கள். சாலையில் நடந்து செல்லுகையில்...

''ஷண்! என்ன ஆச்சு சொல்லு.''

''என்ன?''

''பெண் உன்னுடன் வரவில்லையா?''

''டோண்ட் பி ஸில்லி.....''

இருவரும் நடந்து சென்றபோது காலடிச் சப்தம் கேட்கும் மௌனம்.

''ஷண் அவள் நிச்சயம் உன்னுடன் வரவில்லையா?''

''மனோஜ்! நான் கம்ப்யூட்டரைப் பார்க்க நேராக வந்துவிட்டேன்.''

''சினிமாவில் உங்கள் இருவரையும் சட்டென்று காணோம்? ஷண் என்னிடம் பொய் சொல்லாதே. உன்னைத் தொடர்ந்து இவள் வரவில்லையா?''

''இல்லை.''

''என்னிடம் உண்மையைச் சொல்லி விடுவது நல்லது.''

அவன் எரிச்சலுடன் ''ஸில்லி! நான் தனியாகத்தான் சினிமாவிலிருந்து புறப்பட்டு வந்தேன்.''

''அந்தப்பெண் உன் அருகில் உட்கார்ந் திருந்தாளே?''

''இருந்தால் சந்தேகம் வரும் என்று அவளை ப்ரமிளாவிடம் போய் உட்காரும்படி சொல்லிவிட்டேன்.''

''பின் என்ன ஆயிற்று?''

''எனக்கு என்ன தெரியும்? மனோஜ் நீ கேள்வி கேட்பதைப் பார்த்தால் என்மேல் சந்தேகப்படுவாய் போலிருக்கிறதே!''

''அவர்கள் சந்தேகப்படலாம்.''

''வாட் டு யு மீன்? மை காட்! மனோஜ் திஸ்... திஸ்... ஷக்ஸ்...''

''என்னிடம் இப்போதும் உண்மையைச் சொல்லுதல் நல்லது.''

''என்ன விளையாடுகிறாய்? நான் தனியாகத்தான் வந்தேன்.''

''சரி.''

''நான்சென்ஸ்! நான் என்னவோ பெண்களுடன் சுமுகமாகப் பழகினதால் எல்லாப் பெண்களையும்....''

''நீயே என்னிடம் சொல்லியிருக்கிறாய், இந்த பெண்ணைக் கணக்குப் பண்ணப் போவதாக உத்தேசம் என்று....''

''விளையாட்டுக்கு, வேடிக்கைக்குச் சொல்லக்கூடாதா! மை காட்! மனோஜ் கம் ஆஃப் இட். நீயே சந்தேகப்பட்டு என்னைச் சிறைக்கு அனுப்பி விடுவாய் போல இருக்கிறதே!''

''என்ன செய்வது? ஐம் நாட் கன்வின்ஸ்ட். ஐ வாண்ட் டுபி ஷ்யூர் ஷண்.''

''பார் என் நண்பனே! ஒரு கணமேனும் சந்தேகிக்காதே. என்னை உனக்குத் தெரியாதா? பேசுவேனே தவிர கோழை நான். இரவில் வெளியே போனதெல்லாம் தம் அடிக்கவோ கொஞ்சம் பொட்டலம்



''ரேஷன் கார்டு தொலைஞ்சு போச்சு... புது ரேஷன் கார்டு வேணும்னு கேட்டதுக்கு உங்க ஆஃபீஸ் கிளார்க் நூறு ரூபாய் லஞ்சம் கேட்கிறார் சார்!''

''அவரு ஒருத்தரு... யாரிடம் எவ்வளவு கேட்கணும்னு தெரியாத மனுசன். எழுபத்தைந்து ரூபாய் என்னிடம் தாங்க. நான் ரேஷன் கார்டுக்கு ஏற்பாடு பண்றேன்.''

- தக்கலை சு. கந்தையா.

கிடைக்கிறது என்று ஊதுவதற்கோதான். புரியாத தேசத்தில் புரியாத பாஷையில் பேசும் மனிதர்களிடம் அதுவும் பெண்களுடன் வம்பு வைத்துக் கொள்ள அவ்வளவு முட்டாள் இல்லை நான். அந்த கருப்பாயி என்கிற பெண்ணை நான் அழைத்து வந்தது அவளுக்கு இங்கிலீஷ் கற்றுக் கொடுத்து அதை கம்ப்யூட்டரில் ஒரு பேசிக் ப்ரோக்ராம் எழுத வைக்கும் ஒரு பரிசோதனைக்காகத்தான்.''

''என்னவோ உளறுகிறாய்.''

''மனோஜ் எனக்குக் கவலையாக இருக்கிறது.''

''என்ன?''

அவன் குரல் நடுங்கியது. ''என்னைப் பிடித்துக்கொள்ள மாட்டார்களே!''

''நீ எதும் செய்யவில்லை தானே?''

''இல்லை, இல்லை, இல்லை.''

''அப்படியென்றால் எதற்குப் பயப்பட வேண்டும்?''

''உன் குரலில் சந்தேகம் தொனிக்கிறதே?''

''அது நீயாகக் கற்பனை பண்ணிக் கொள்வது.''

மனோஜ் என்னைக் காப்பாற்ற வேண்டியது உன் பொறுப்பு. ஏதாவது விபரீதம் நிகழ்ந்தால் காப்பாற்ற வேண்டியது உன் பொறுப்பு. நீதான் காப்டன். தலைவன். பொறுப்பற்ற தேசத்திலே எனக்குத் தெரிந்த இரண்டு தமிழ் வார்த்தையை வைத்துக் கொண்டு...''

''என்ன வார்த்தை?''

''விளக்கை அணை.''

''இதை ஒரு பொழுதும் யாரிடமும் சொல்லாதே.''

இருவரும் ஆரம்பாக்கத்தை அடைந்த போது, எதிரே இரண்டு கண்கள் தெரிந்தன. சாலையில் அவை பெரிதாகி, அவர்களருகில் நிற்க, தூக்கம் கலைந்த போலீஸ் இன்ஸ்பெக்டர், கையில் டார்ச்சும் கமுத்து மப்ளருமாக கான்ஸ்டபிளுடன், ''எங்க போறிங்க?'' என்றார்.

''உங்களைச் சந்திக்கத்தான்.''

''பாடி எங்க இருக்கு?''

''மரத்துக்குப் பக்கத்தில்.''

''எங்கயும் போயிராதிங்க. ஒட்டல்லயே இருங்க. விசாரிக்க வரணும்.''

''சரிங்க.''

ஜீப் மறைந்ததும் ''என்ன சொன்னார்?'' என்றான் ஷண்பேகர்.

''விசாரிக்க வருவதாகவும் ஓட்டலிலேயே இருக்கும்படியும் சொன்னார்.''

ஷண்பேகர் அப்படியே சாலையில் உட்கார்ந்து கொண்டு, ''நான் காலி'' என்று மனோஜின் காலைப் பிடித்துக் கொண்டு விட்டான்.

(தொடரும்)



''தீபாவளியன்னிக்குக் கூட நம்ம தலைவர் தலைக்குக் குளிக்க மாட்டார்!''

''ஏன்?''

''எங்கே பத்திரிகைகளிலே 'அரசியலுக்கு முழுக்கு'ன்னு எழுதிடுவாங்களோன்னுதான்!''

- வேதபுரி எஸ். ரமேஷ்



''அவளும் நோக்கினாள்... நானும் நோக்கினேன்...''

''பலே... காதல் வந்ததா?''

''நாசமாப் போச்சு... எனக்கு ''மெட்ராஸ் ஐ''தான் வந்தது!

- கா. ரா. ராமகிருஷ்ணன்.



''என்னது... நம்ம இன்ஸ்பெக்டரே கள்ளச் சாராயம் காய்ச்சறாரா?''

''ஊம்... கேட்டா வேறே யாரோ காய்ச்சி நாம சஸ்பெண்ட் ஆகறதுக்கு இது எவ்வளவோ மேல்ங்கறாரு!''

- வேதபுரி எஸ். ரமேஷ்

# பரிசுச் சீட்டு

வழக்கம் போல சங்கரபாண்டியன் கடையருகே சோமுவின் ஸ்கூட்டர் நின்றது. சங்கரபாண்டியன் சிரித்துக் கொண்டே ஐந்து மிட்டாய்களைக் கொடுத்தான். சோமு இப்படி மிட்டாய் வாங்குவதை ஒரு வழக்கமாக வைத்துக் கொண்டிருந்தான். சிகரெட் பிடிப்பது கணிசமாகக் குறைந்தது. அலுவலகம் போகும் போது இந்தக் கடைக்கு வந்தால் மனம் உற்சாகமாக இருக்கிறது. செய்தித்தாள் வாங்குபவர்களும், வாராந்திர இதழ்களை வாங்குபவர்களுமாக இருப்பார்கள். பதினைந்து பைசாவுக்கு ஊறுகாய் பாக்கெட் வாங்குபவர்களும் தலையில் எண்ணெய் வைத்துக் கொண்டு சீயக்காய்ப் பொட்டலம் வாங்குபவர்களும் இருப்பார்கள். வெறுமனே தினசரித் தாள்களின் போஸ்டரை மட்டும் வாசிப்பவர்களும் உண்டு. எல்லோரிடத்திலும் சங்கர பாண்டியனுக்குச் சிநேகிதம். பெட்டிக் கடையில் அவனுடைய ஜாடையாய்ப் படம் ஒன்று மாட்டியிருப்பான். அவனுடைய அண்ணன் படமாம், அவன்தான் சங்கரபாண்டியனை முன்னுக்குக் கொண்டு வந்தானாம். உயிருடன் இருக்கும்போதே அம்மாவையும் அப்பாவையும் மறந்து விடுகிற இந்த உலகத்திலே இப்படியும் ஒரு பிறவி.

அங்கு ஒரு பத்துப் பன்னிரண்டு வயது இருக்கும். ஒரு பையன் லாட்டரிச் சீட்டு விற்றுக் கொண்டிருப்பான். அவன் வைத்திருந்த அட்டையில் எல்லா மாநிலச் சீட்டுகளும் இருக்கும். நிறைய 'கிளிப்' போட்டு வரிசையாகப் பல வண்ணங்களில் டிக்கெட் வைத்திருப்பான். சோமுவுக்கு இந்த லாட்டரி டிக்கெட்டு வாங்குவது சம்மதமில்லை. உழைத்து வாழும் ஒரு சமுதாயத்தைத் தோற்றுவிப்பதற்குப் பதில் அதிர்ஷ்டத்தை நம்பும் இந்தச் சீட்டு விற்பனை அவனுக்கு அறவே பிடிக்காது.

''இன்றைக்காவது வாங்கிக் கொள்ளுங்கள் சார், இரண்டு ரூபாய் டிக்கெட், ஐந்து ரூபாய் டிக்கெட். நாளை ஹரியானா குலுக்கல், இரண்டு நாட்கள் கழித்து தமிழ்நாடு குலுக்கல். ஒன்றே ஒன்று வாங்கிக் கொள்ளுங்கள். அதிருஷ்டம் கதவைத் தட்டுகிறது'' என்றான் அந்தப் பையன். இது ஒன்றும் புதுசு இல்லை. தினமும் இதே பாட்டுத்தான். வீடு இருந்தால்தானே அதிர்ஷ்டம் கதவைத் தட்டும். நம் மக்களுக்கு இன்னமும் அதிருஷ்ட மோகம் போகவில்லையே என்று நினைத்தான்.

இவன் எதையோ எண்ணிக் கொண்டிருப்பதை, அந்தப் பையன் லாட்டரி சீட்டு வாங்குவதைப் பற்றித்தான் நினைத்துக் கொண்டிருக்கிறான் என்று தவறாக எடை போட்டான்.

கண்கள் மலர்ச்சி கொள்ள ''எந்த டிக்கெட் கிழிக்கட்டும் சார்?'' என்றான்.

''எனக்கு லாட்டரி டிக்கெட்டா? நான் என்றாவது வாங்கிப் பார்த்திருக்கிறாயா?'' என்று சொன்னவுடன் அவன் முகம் வாடியது.

''சார் இன்றைக்கு மட்டும் வாங்கிக் கொள்ளுங்கள்.''

''இன்றைக்கு என்ன ஸ்பெஷல்?''

பையன் மௌனமாக இருந்தான்.

''சொல்.''

''நான் ஒழுங்காகச் சாப்பிட்டு இரண்டு நாட்கள் ஆகின்றன.'' அவன் கண்களில் கண்ணீர் மல்கி இருந்தது.

சோமுவின் கன்னத்தில் பளீர் என எதிர்பாராமல் யாரோ அறைந்தது போல இருந்தது. இது என்ன அநியாயம், இந்தப் பிஞ்சு, சோறு இல்லாமல் வாடுகிறது. தனி ஒருவனுக்கு உணவில்லை எனில் ஜகத்தினை அழித்திடுவோம் என்று பாடுவோம். ஜகத்தினை அழித்து விடுவதால் இந்தப் பையன் வயிறு நிரம்பி விடுமா? அல்லது இந்தத் தளிரின் கண்ணீர் துடைக்கப்பட்டு விடுமா? நீ ஒரு பையனில்லை. இந்தியாவின் பிரதிநிதி. அதிர்ச்சியுடன் சோமு பார்த்துக் கொண்டிருந்தான். ''இந்தா பத்து ரூபாய். வேண்டு மட்டும் சாப்பிடு'' என்றான்.

பையன் கண்களைத் துடைத்துக் கொண்டு, இரண்டு லாட்டரிச் சீட்டுகளைக் கிழித்து, சோமுவிடம் கொடுத்தான்.

''எனக்கு லாட்டரிச் சீட்டு வேண்டாம். எனக்குப் பழக்கம் இல்லை. பிடிக்கவும் பிடிக்காது.''

''இல்லை சார், வாங்கிக் கொள்ளுங்கள். நான் இனாமாக யாரிடமும்

ஜ.சாமிநாதன்



பணம் வாங்குவதில்லை. தாங்க்ஸ் சார்'' என்று போய் விட்டான்.

சோமு அதிர்ந்து போனான். இப்படியும் ஒரு பையனா? வளர்ந்தவர்கள், ஆசைகளையும் பிரம்மாண்டமாக வளர்த்துக் கொள்கிறார்கள். அந்த ஆசைகள் நிறைவேறுவதற்கு எந்தவிதமான செயல்களையும் செய்கிறார்கள். தர்மமும், ஒழுக்கமும் அவர்களிடமிருந்து ஓடிப் போய் விடுகின்றன. கொடுத்தும் வாங்கிக் கொள்ளாமலிருப்பதற்கு எத்தனை பெரிய மனுஷத்தனம் வேண்டியிருக்கிறது!

மணியைப் பார்த்தான். மிகவும் லேட்டாகி விட்டது. அவசர அவசரமாக அலுவலகத்திற்குச் சென்றான். அங்கே சோமுவின் உதவியாள் காத்துக் கொண்டிருந்தான். ''மானேஜர் உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார். அந்த காரூர் அணை ரிப்பேருக்கான டென்டரை இன்று முடிக்க வேண்டுமாம்.''

சோமு மானேஜர் அறைக்கு விரைந்தான். ''சாரி சார், எதிர்பாராமல் நாழிகை ஆகி விட்டது.''

''அதனால் பரவாயில்லை. எப்போதும் நேரப்படி வருகின்ற உனக்கு இன்றைக்கு என்ன ஆயிற்றோ என்று கவலைப் பட்டேன். அது சரி இந்தக் காண்டிராக்டை வாசு அண்ட் கம்பெனிக்குக் கொடுக்கலாம் என்று உன் உதவியாளன் கிருஷ்ணன் என்னிடம் பேசிக் கொண்டிருந்தான்.''

''சற்று ஃபைலைக் காண்பியுங்கள் சார்... நியாயப்படி பார்த்தால் நாதன் அண்ட் நாதனுக்குத்தான் இந்த டெண்டரை கொடுக்க வேண்டும். அவர்கள்தான் குறைந்த ரேட்டுக்கு டெண்டர் போட்டிருக்கிறார்கள்.''

''அவர்கள் வேலை சரியில்லையாமே!''

''அதை நாம் சொல்ல முடியாது. என்ஜினியரிங் டிபார்ட்மெண்ட் சொல்ல வேண்டும். அவர்கள் எல்லோருமே சரி என்று சொல்லி விட்டார்கள்.''

''அப்படியா. அதன்படியே டைப் அடித்துக் கொண்டு வாருங்கள். கையெழுத்துப் போட்டு விடுகிறேன்.''

வெளியில் வந்த சோமுவுக்குக் கடுங்கோபம் வந்தது.

''கிருஷ்ணன் உன் மனசிலே என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்? எதற்கு இப்படி சரியில்லாத ஒன்றை மானேஜரிடம் சொல்லியிருக்கிறாய்?'' என்றான் கிருஷ்ணனிடம்.

கிருஷ்ணன் பார்வை ஒன்றும் சரியில்லை. சோமுவுக்கு இப்போது ஞாபகம்

வந்தது. வாக கம்பெனி ஆசாமி ஒருவர் இவனை இரண்டு மூன்று நாட்களாகச் சந்தித்து விட்டுப் போனான்.

''கிருஷ்ணன், உன்னிடம் சுற்றி வளைத்துப் பேசவில்லை. ஒழுக்கம்தான் முக்கியம். ஒரு பைசாவாக இருந்தாலும் சரி, ஒரு கோடியானாலும் சரி; ஒழுங்காக வேலையைப் பார்த்துச் சம்பாதிக்க வேண்டும். நம்முடைய தேவைகளுக்கு எல்லை ஏது? சைக்கிள் வைத்திருப்பவர்களுக்கு ஸ்கூட்டர் வேண்டியிருக்கிறது. ஸ்கூட்டர் வைத்திருப்பவனுக்கு கார். கறைபடாத துணியிலேதான் சிறிது கறைபட்டாலும் தெரியும். அரசியல் வாதிகளைப் போல கறையே நிறமாகிப் போய்விட்டால் கறை வெளியில் தெரியாது. ஆனால் இந்தப் பாவம் ஒரு காலத்தில் ஒரு கவளம் சோறு கூடச் சாப்பிட முடியாதபடி அடித்து விடும். நேர்மையாக வாழ்வதைப் போல ஒரு கம்பீரம் கிடையாது. இரண்டு நாள் சாப்பிடாமல் ஒரு சின்னப் பையன் கூட நம்மை விடக் கௌரவமாக இருக்கிறான்.''

கிருஷ்ணன் தலைகுனிந்து நின்றிருந்தான். சோமுவின் வார்த்தைகள் அவனைச் சவுக்கால் அடித்தன.

''கிருஷ்ணா, போனால் போகிறது. வீட்டுக்குப் போய்க் குளி.''

அன்று அலுவலகத்தில் சோமுவிற்கு ஏகப்பட்ட வேலை. மணி ஆறரை ஆகி விட்டது. வேலையை முடித்துக் கொண்டு புறப்பட்டான். அடையாறில் உள்ள ஆஸ்பத்திரியில் நண்பனுடைய தந்தையைச் சேர்த்திருந்தார்கள். அரை டஜன் சாத்துக்குடிப் பழம் வாங்கிக் கொண்டான். கொஞ்சம் இருட்டு கவியத் தொடங்கியது. மருத்துவ மனையில் நுழையும் போது 'சாமி பிச்சை' என்ற குரல் கேட்டது. நமது இந்தியாவின் பல கோடி மக்கள் மற்றவர்களை இந்த மாதிரி சாமியாக்குகிறார்கள் என்று நினைத்தான். ஒரு பாண்ட் பையில் இரண்டு ஒரு ரூபாய் நோட்டு இருந்தது ஞாபகத்துக்கு வந்தது. ஸ்கூட்டரில் இருந்தபடியே பாண்டில் இருந்து எடுத்துப் போட்டான்.

உள்ளே போய் நண்பரை விசாரித்தான். ''இப்போது அப்பாவின் உடல் தேவலையா?''

''இந்த ஆஸ்பத்திரிக்கு நிறையப் பணக்காரர்கள் நன்கொடை கொடுத்திருக்கிறார்கள். சார்ஜும் குறைவு. இருந்தாலும் எனக்குக் கட்டுப்படியாகவில்லை'' என்று வருத்தப்பட்டுக் கொண்டார்.

''நான் ஓர் ஆயிரம் ரூபாய் கொடுக்கிறேன். இரண்டு மாதம் கழித்து போனஸ் வாங்கும் போது திருப்பினால் போதும்'' என்று சொன்னான்.

''நீ இப்போது கொடுக்கிற ஆயிரம் ரூபாய் ஒரு லட்சம் போல'' என்று நாத் தழுதழுக்கச் சொன்னார் அவர்.

நண்பரிடம் விடைபெற்றுக் கொண்டு மயிலாப்பூரில் இருக்கும் ஹோட்டலுக்குச் சாப்பிடச் சென்றான் சோமு. முப்பத்திரண்டு வயசாகியும் இன்னும் கல்யாணம் ஆக வில்லை.

இரண்டு நாள் ஆயிற்று. லாட்டரிச் சீட்டு விற்கும் பையன் சோமுவின் வீட்டிற்கு ஓடி வந்தான். ''சார், உங்களுக்கு இரண்டு லட்சம் லாட்டரி விழுந்திருக்கிறது. சார், உங்கள் நல்ல குணத்திற்குக் கோடி ரூபாய் கூட விழும்!'' என்று மிகவும் மகிழ்ச்சியோடு கூவினான்.

சோமு நம்பவில்லை. உள்ளே போய் பாண்டைப் பார்த்தான். அதன் இரண்டு பாக்கெட்டிலும் லாட்டரிச் சீட்டு இல்லை. அதற்கு பதில் இரண்டு ஒரு ரூபாய் நோட்டு இருந்தது. அப்படியானால், அந்த லாட்டரிச் சீட்டு? ரூபாய் நோட்டுக்களாக நினைத்து அந்தப் பரிசுச் சீட்டைப் போட்டிருக்கிறான். வேகமாகக் குளித்து விட்டு அந்த மருத்துவ மனைக்குச் சென்றான். அந்த லாட்டரிப் பணம் யாருடையது என யோசித்தான். 'பிச்சைக்காரனுக்குப் போட நினைத்ததோ இரண்டு ரூபாய். ஆகையால் மீதமுள்ள பணம் என்னைச் சேருமா? அல்லது இரண்டு ரூபாயோ, இரண்டு லட்ச ரூபாயோ? போட்டது போட்டதுதானா' என்று சிந்தித்தான்.

அங்கே அந்தப் பிச்சைக்காரன் இருந்தான்.

''என்ன சாமி என்னைக் குருடு என்று நினைத்தாயா? ரூபாய்க்குப் பதில் ஏதோ காகிதத்தைப் போட்டு விட்டாயே இந்தா அந்தக் காகிதங்கள்.''

சோமு வாங்கிப் பார்த்தான்; பரிசுச் சீட்டுகள்தாம்.

''இதோ பார் உனக்கு இரண்டு லட்ச ரூபாய் பரிசு விழுந்திருக்கிறது.''

''எனக்கா?'' என்று ஹோவென்று சிரித்தான்.

''உனக்கு அன்றைக்கு பரிசு சீட்டைப் போட்டேன் பார். அதற்குத்தான் பரிசு.''

''பரிசுச் சீட்டு உங்களுடையதுதான். காரணம், எனக்கு அதைப் பணமென்று நினைத்துத்தான் போட்டீர்கள்... பரிசுச் சீட்டு என்று அல்ல. எனக்குத் தினமும் வரும் ஏழு, எட்டு ரூபாய் போதும். அந்த ரூபாயை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள்.''

சோமு தான் எங்கேயோ போய் விட்டதாக உணர்ந்தான்.

ஒரு வருஷம் கழித்து அடையாறு மருத்துவமனையில் இன்னமும் பத்துப் பெரிய அறை கட்டியிருந்தார்கள். 'அருள்சாமியின் உபயம்' என்று எழுதியிருந்தது. ஆமாம், வாசலில் இருக்கும் பிச்சைக்காரன் அருள்சாமியின் பெயரில் சோமுதான் கட்டியிருந்தான்.




**பரிசு**

**ரூ. 40,000**

# கல்கி பொன்விழா நாவல் போட்டி

எழுத்தாளர்களின் ஏகோபித்த வேண்டுகோளுக்கு இணங்க, கல்கி பொன் விழா நாவல் போட்டியின் முடிவு தேதி, அக்டோபர் 31, 1991 வரை நீட்டிக்கப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| சரித்திர நாவலுக்குப் பரிசு (சுமார் 52 இதழ்கள்) | ரூ. | 20,000/- |
| சமூக நாவலுக்குப் பரிசு (சுமார் 26 இதழ்கள்) | ரூ. | 10,000/- |
| மர்ம நாவலுக்குப் பரிசு (சுமார் 12 இதழ்கள்) | ரூ. | 5,000/- |
| விஞ்ஞான நாவலுக்குப் பரிசு (சுமார் 12 இதழ்கள்) | ரூ. | 5,000/- |

முடிவு தேதி : அக்டோபர் 31, 1991

○ இதற்கடுத்த ஒன்பது மாதங்களில் நாவல்களின் பரிசீலனை முடிந்து, கல்கி பொன் விழாச் சிறப்பிதழில் முடிவு வெளியாகும். பரிசு பெற்ற நாவல்களுள் ஒன்று அதே சிறப்பிதழில் ஆரம்பமாகும். அதாவது 1992 ஆகஸ்டு முதல் வார இதழ்.

○ பிரசுரத்துக்கு ஏற்கப்படும் இதர நாவல்களுக்கு வழக்கமான சன்மானம் அளிக்கப்படும்.

○ நடுவர் குழு நாவல்களைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய நாவல்களைத் தேர்ந்தெடுக்கும்.

○ கல்கி பொன் விழா நாவல் போட்டிக்கு அனுப்பப்படுவதாகத் தெளிவாகக் குறிப்பிடுதல் அவசியம்.

○ ஒவ்வொரு வாரமும் படத்துடன் சேர்த்துக் கல்கியில் 4 - 5 பக்கங்களுக்கு மேற்படாதபடி அத்தியாயங்களின் அளவை நிர்ணயிப்பது நல்லது.

○ கடிதப் போக்குவரத்து கிடையாது.

○ சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

○ பிரசுரத்துக்கு ஏற்கப்படாத நாவல்களைத் திரும்பப் பெற போதிய அளவு தபால் தலைகள் இணைக்க வேண்டும்.

○ அப்படித் திருப்பி அனுப்பவே அவசியம் நேராதபடி அற்புதமான நாவல்களை எழுதி அனுப்பிக் கல்கி பொன் விழா ஆண்டினைச் சிறப்பிக்குமாறு எழுத்தாளர் பெருமக்களை வேண்டுகிறோம்.

- ஆசிரியர், கல்கி, சென்னை - 600 032.

# பொன்விழா ஆண்டு | பொன்நகைப் பரிசுத் திட்டம் - 5

● டிப்ஸ் ● டிப்ஸ் ● டிப்ஸ் ● டிப்ஸ் ● டிப்ஸ் ● டிப்

## போட்டி முடிவு :

**போ**ட்டிக்கு வந்த ஏராளமான டிப்ஸ் பட்டியல்கள் பரிசீலனைக்கு உள்ளாகி மொத்தம் 23 பிரசுரத்துக்கு ஏற்கப்பட்டன.

இவற்றுள், பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறுமான முள்ள பொன் நகைப் பரிசைக் குலுக்கல் முறையில் பெறுவர் :

**எஸ். செந்தில்குமார்**
**த/பெ வி. சீனிவாசன்,**
**39, எஸ்.பி.எஸ். இல்லம்,**
**காவேரி நகர், மேலசிந்தாமணி,**
**திருச்சி - 620 002.**

பொன் நகைப் பரிசு பெறுபவரின் டிப்ஸ் பட்டியல் கீழே பிரசுர மாகிறது. மற்றவை வாரம் இரண்டிரண்டாக அடுத்த பதினோரு வாரங் களில் பிரசுரமாகிச் சன்மானம் பெறும்.




# கல்கி



பாலு ஜுவல்லர்ஸ்

# ஆங்கில அறிவு அதிகரிக்க...

*1)* குழந்தைப் பருவத்திலிருந்தே உங்கள் மகன் அல்லது மகளின் ஆங்கிலப் பாடத்தில் தனி கவனம் செலுத்துங்கள்.

*2)* அகராதியை அடிக்கடி பயன்படுத்தி அர்த்தம் அறிய ஊக்குவியுங்கள். கூடவே ஸ்பெல்லிங்கும் மனத்தில் பதிய வேண்டும்.



*3)* பாடப் புத்தகம் அல்லாத குழந்தை களுக்கான பிற ஆங்கில சஞ்சிகைகளையும், கதைப் புத்தகங்களையும் வாசிக்க வசதி செய்து கொடுங்கள்.

*4)* பல சந்தர்ப்பங்களில், குறிப்பிட்ட வார்த்தை புரியா விட்டாலும் மொத்தமான



அர்த்தம் விளங்கி விடும் ஆதலால், வேக மாகப் படித்து ரசிக்கப் பழகலாம். மறு முறை படிக்க விரும்பும் போது குறிப்பிட்ட சொற்களுக்கு நிதானமாக அகராதியில் அர்த் தம் பார்க்கலாம்.

5) ஆங்கில கதைப்புத்தகங்கள், சஞ்சி கைகள் படிப்பதால் இலக்கிய ரசனை கூடு கிறது: ஆங்கில அறிவு மட்டுமின்றி பொது அறிவும் வளர்கிறது - மறவாதீர்கள். நாள டைவில் ஆங்கில நாளிதழ்களையும் வாசிக்க ஊக்குவியுங்கள்.

6) படித்தால் மட்டும் போதாது; உச்ச ரிப்பு சரியாக அமைய வேண்டும். இதற்கு மிக எளிய வழி, டி.வியில் ஆங்கில நிகழ்ச்சி களை - குறிப்பாகச் செய்திகளையும் மேல் நாட்டு நிகழ்ச்சித் தயாரிப்புக்களையும் - பார்ப்பது; ரேடியோவில் ஆங்கிலச் செய்தி அறிக்கைகளையும் பி.பி.ஸி செய்திகளை யும் கவனமாகக் கேட்பது.

7) ஆங்கிலத்தில் கூச்சமின்றி தைரிய மாகப் பேச குழந்தைகளை உற்சாகப்படுத் துங்கள். வீட்டில் பேசிப் பழகினால் பிறகு சந்திக்கும் பிறரிடமும் பேசத் துணிவு வரும். பேசப் பேசத்தான் உச்சரிப்பும் திருந் தும். இலக்கணப் பிழைகளும் சரியாகும்.

8) குழந்தைகளுக்காக இதையெல்லாம் நீங்கள் கவனித்துச் செய்யும் போது நீங்க ளும் ஒரு பெரிய பயனை அடைகிறீர்கள்! அதாவது, உங்களுடைய ஆங்கில அறிவு - சொற்பிரயோகம், உச்சரிப்பு முதலியன முன்னிலும் அபிவிருத்தி அடையும். பொது அறிவும் பெருகும்!

---



திருடன் 1 : தீபாவளிக்கு டிரெஸ் எடுக்க ராப்பகலா அலைஞ்சீங்க ளாமே...?''

திருடன் 2 : ''ஆமாம்பா... பகல்ல கடையை செலக்ஷன் பண்ணி வெச் சிட்டு, நைட்ல துணியை செலக்ஷன் பண்ணுவேன்!''

- சீர்காழி. வி. ரேவதி

''உங்க அப்பா பெரிய எம். எல். ஏ. வாக இருக்கலாம் அதுக்காக இப்படி நடந்துக்கக் கூடாது!''

''ஏன் என்ன சொன்னார்?''

'' 'தீபாவளி சீரா ஸ்கூட்டர், மோதிரம் எல்லாம் வாங்கித் தரேன்னு சொன்னீங்களே மாமா'ன்னு கேட்டதுக்கு, 'தேர்தல் சமயத்தில் இந்தத் தொகுதி மக்களுக்குக் கூடத்தான் என்னென்னவோ செய்யறதா வாக்குறுதி தந்தேன்... இதையெல்லாம் பெரிசுபடுத்தலாமா'ன்னு திருப்பிக் கேட்கிறாரு!''

- கோபிகா எஸ். முரளி



# ஆங்கிலப் பேராசான்

800 பக்கங்கள் விலை ரூ.75-00 தபால் செலவு ரூ.10-00

இன்று புதிதாய்ப் பிறந்தோம் என்ற எண்ணமதைத் திண்ணமுறக் கொள்வீர்! தரணி போற்றும் ஆங்கிலத்தைத் தண்தமிழ் மூலம் கற்பீர்!

எத்தனையோ கல்வி நிலையங்கள், நூல்கள் பார்த்தாயிற்று! இனிமேல்தானா ஆங்கிலம் வரப் போகிறது என்னும் கவலையுறாதீர்! அந்த ஈனக் கவலையை ஓட விரட்டுங்கள்!

ஆங்கிலத்தைக் கற்றுவிடவேண்டும் என உறுதியாக இருங்கள்! உதவி செய்ய இதோ, பேராசிரியர் வந்து விட்டார், 'ஆங்கிலப் பேராசான்' என்னும் நூல் வடிவில்! தேர்ந்த ஒரு பேராசிரியரே உங்கள் முன் நின்று கரும்பலகையில் எழுதிக்காட்டி ஒவ்வொரு சொல்லையும் வாக்கியத்தையும் விளக்குவது போல் அமைந்த நூல் இது!

'தமிழ் மூலம் ஆங்கிலம் கற்க ஒன்பது நூல்கள்' என்னும் எமது வெளியீடுகளில் முதல் ஏழு நூல்களைத் தொகுத்து ஒரே நூலாக பைண்ட் செய்துள்ளோம். தொடர்புக்காகப் பெயரைச் சிறிது மாற்றியுள்ளோம். இதனுள் அடங்கிய ஏழு நூல்கள் வருமாறு:

1. Basic English Grammar; 2. Advanced English Grammar (பிழையில்லாமல் நல்ல ஆங்கிலம் எழுதுவது எப்படி?); 3. Important Sentence Structure Part I; 4. Important Sentence Structure Part II; 5. Idioms and Phrases (மரபுச் சொற்களும் தொடர்களும்); 6. ஆங்கிலத்தில் கடிதம் எழுதுவது எப்படி?; 7. ஆங்கிலத்தில் பேசுவது எப்படி?

இந்த ஏழு அடங்கிய ஒன்றால் வெற்றி பெற முடியவில்லையென்றால், வேறெதனால் வெற்றி பெற முடியும்? எனவே முயலுங்கள்! உங்கள் முயற்சி சரியான முயற்சியாக இருக்கவேண்டும். தவறான முயற்சி அயர்ச்சி தரும்; தளர்ச்சி தரும்; இறுதியில் குழப்பம் மிகும்!

## ✓ சரியான முயற்சி என்றால் என்ன?

○ 1 அடிப்படை இலக்கணக் கூறுபாடுகளை (Basic English Grammar) முதலில் பொதுவாக அறிதல் வேண்டும். ○ 2 பின் அவ்விலக்கணப் பகுதிகளைச் சிறப்பாக (Advanced English Grammar) தெரிந்து கொள்ளவேண்டும். ○ 3 பொதுவாகவும் சிறப்பாகவும் இலக்கணக் கூறுபாடுகளை அறிந்து கொண்ட பிறகு Verb என்னும் வினைச்சொல்லைச் சிறிதும் ஐயத்திற்கு இடமின்றிக் கற்றுத் தெளிதல்வேண்டும். Verb என்று சொன்னாலே வீறு கொண்டு எழவேண்டும்; ஒரு சக்தி பிறக்கவேண்டும் மூச்சினில்! வாக்கிய அமைப்பின் (Important Sentence Structure Part I) ஜீவ நாடியான இது, ஆங்கில மொழிக்கே உயிர் போன்றதாகும். ○ 4 சொற்களின் கூட்டம் என்பது கொட்டி வைத்த கற்கள் போன்றது; வாக்கியம் என்பது கட்டி வைத்த கட்டடம் போன்றது. சொற்களை மேலும் மேலும் சேர்த்து எப்படி வாக்கியங்களைப் பல்வேறு வடிவில் அமைப்பது என்பதனை (Important Sentence Structure Part II) தங்குதடையின்றி உணர்தல்வேண்டும். ○ 5 சில சொற்களுக்கு Dictionary-யைப் பார்த்து நேராகப் பொருள் கொள்ள முடியாது. மரபுச் சொற்களும் தொடர்களும் (Idioms and Phrases) என்னும் அவற்றை மரபு வழியில் நின்று பொருள்கொள்ளவேண்டும். ○ 6 கடிதம் எழுதுவது (Letter Writing) ஒரு கலை. அதனைக் காவிய நயம்பட அறிதல் நன்று! ○ 7 இப்படி இலக்கணப் பகுதிகளையெல்லாம் அறிந்து உணர்ந்து தெளிந்தபின் 'ஆங்கிலத்தில் பேசுவது எப்படி?' என ஏன் அஞ்சவேண்டும்?

இவ்வளவும் முறையாக அமைதல்தான் சரியான பயிற்சியாகும். இது வாய்த்தபின் ஒரு குறையும் உண்டோ? நீங்கள் ஆங்கிலத்தில் பேசுவீர்கள்! ஆங்கிலத்தில் எழுதுவீர்கள்! இது மட்டுமா? பிறர் எழுதுவதில், பேசுவதில் உள்ள இலக்கணப் பிழைகளையும் உங்களால் சுட்டிக்காட்ட முடியும்!

இந்த ஒப்பற்ற 'ஆங்கிலப் பேராசா'னின் விலை மிகக் குறைவுதான்! ரூ. 75.00 தபால் செலவு ரூ. 10 சேர்த்து ரூ. 85.00 M.O. (அ) D.D. அனுப்புக. பதிவு அஞ்சலில் உடனே அனுப்புகிறோம்.

பணம் அனுப்பவேண்டிய முகவரி:

**Varthamanan Pathippagam**

ARR Complex

141, Usman Road, T. Nagar, Madras-17.

(பனகல் பார்க் அருகில்)

# பஸ் கட்டணம் - கிடுகிடு உயர்வு பற்றி?

● ராது ரவி, கும்பகோணம்.

? பஸ் கட்டணம் கிடுகிடு என்று உயர்கிறதே?

! நேற்று வரை இருந்த அதே கட்டணத்துக்குத் தனியார் பஸ்கள் விடத் தயாராக இருக்கிறார்களா என்று கேட்டுப் பார்க்கட்டும் அரசு. கியூவில் நிற்பார்கள், அரசுக்குச் செலுத்த வேண்டிய லைசென்ஸ் தொகைகளைச் செலுத்திய பிறகு, பஸ் போக்குவரத்தை ஏற்று நடத்த. செலவினங்களைக் குறைக்கவும் வருவாயைப் பெருக்கவும் வேறு எத்தனையோ பல வழிகள் இருக்க, ஊருக்கு இளைத்தவன், பஸ் பயணிதான்.

● ச. நடராசன், பாளையங்கோட்டை.

? ரஷ்யாவும், அமெரிக்காவும் அணு ஆயுதக் குறைப்புக்கு ஒப்புக் கொண்டது பற்றி?

! ராஜாஜி ஊன்றிய விதையிலிருந்து முளை விட்டு வளர்ந்து பலன்தரும் மற்றொரு மரம்.

● இரா. குமார், புதுச்சேரி.

? டி.வி.யில் புதிதாக விளம்பரதாரர் நாடகங்கள் தொடங்குவதற்கு நீதிமன்றம் இடைக் காலத் தடை விதித்துள்ளதே?

! தில்லுமுல்லு எக்கச்சக்கமாக நடப்பதாகக் குற்றச்சாட்டுக்கள் குவிந்ததன் பலன்.

● கே. ரமேஷ் ராம், செங்குன்றம்.

? பிரதமர் நரசிம்மராவை எதிர்த்துத் தெலுங்கு தேசம் வேட்பாளரை நிறுத்தாதது சரிதானா?

! சரிதான். அதோடு, இவ் விஷயத்தில் முடிவெடுக்கும் முதல் உரிமை மாநில அளவில் பலம் வாய்ந்த தெலுங்கு தேசத்துக்கே தரப்பட வேண்டும் என்ற வாதமும் நியாயம்தான். இப்படிச் சில கோட்பாடுகளின் அடிப்படையில்தான் தேசிய முன்னணி அமைந்தது. அதை மீறுவது சரியல்ல. மேலும் ஆட்சியைக் கவிழ்த்துப் பொதுத் தேர்தலைச் சந்திக்க இன்று யாருமே தயாராக இல்லாத போது பிரதமருக்குத் துணைத் தேர்தலில் எதிர்ப்புக் காட்டுவது தேவையற்றது. எதிர்ப்பின்றியே கூடத் தேர்ந்தெடுத்து விடலாம்.

● த. சத்தியநாராயணன், அயன்புரம்.

? தேர்தலில் போட்டியிட சோனியா மறுத்து விட்டது குறித்து?

! புத்திசாலித்தனம். ஆனால் இதை இத்தனை மூடு மந்திரமாக அவர் வைத்திருந்து கட்சியில் விரிசல் அகலமடைய அவர் அனுமதித்திருக்க வேண்டாம். இப்போதும் கூட, 'ஓராண்டு துக்கம் அனுஷ்டித்த பின் அரசியலுக்கு வருவார்' என்ற பேச்சு அடிபடுகிறது. இதுவும் நல்லதல்ல. 'அரசியல் தனக்கு வேண்டாம்' என்று உதறும் துணிவு அவருக்கு வரட்டும்.

● டி. சீனிவாசன், சென்னை.

? நாட்டுக்கு இன்று தேவைப்படுவது பொருளாதாரச் சீர்திருத்தமா, திறமையான நிர்வாகமா?

! தொண்ணை, நெய் இரண்டும்தான்.

● எல். மாறன், மேல்பட்டி.

? ருமேனிய அம்பாஸிடர் கடத்தப்பட்டது குறித்து?

! இப்படி பிணைக் கைதிகளைப் பிடித்துச் செல்வது என்பது, பயங்கரவாதிகளின் மிகச் சக்திவாய்ந்த ஆயுதமாக இன்று இருக்கிறது. நாட்டில் உள்ள வி. ஐ. பிக்கள் அத்தனை பேருக்கும் பாதுகாப்புத் தர பூனைப் படை உருவாக்க முடியாது என்னும் போது, இதைத் தடுப்பதும் கஷ்டம்தான். எனவே அடிப்படையில் அரசியல் தீர்வுக்கு முயற்சி மேற்கொண்டு இது போன்ற செயல்களுக்குத் தேவையில்லாமல் செய்து விட வேண்டும். அதுவரை காத்திராமல் உடனடியாகச் செய்யக்கூடியவை; 1. பயங்கரவாதிகள் நடமாட்டம்

☛ வருங்....



☛ ... மன்னன்?



❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
எம். யாதவன்,
10, வெள்ளாளத் தெரு,
தென்னூர்,
திருச்சி - 17.

பற்றி அறிய உளவுப் படையை உருவாக்கிப் பயிற்சி தருவது, 2. பயங்கரவாதிகளைச் சமாளிக்க அதிரடிப் படை உருவாக்கி சிறப்புப் பயிற்சி தருவது, 3. பிணைக் கைதிகளைக் கடத்திச் செல்வோருக்கு எந்தவிதமான இரக்கமும் காட்டப்பட மாட்டாது என்பது போல் அதிகபட்ச தண்டனையுடன் சட்டத் திருத்தம் கொண்டு வருவது முதலியன. அயல்நாட்டவர் இங்கு ஊடுருவி வம்பு பண்ணுவார்கள் என்றால், நம்மாலும் அண்டை நாட்டில் ஊடுருவி வம்பு பண்ண முடியும் என்று கூடக் காண்பிக்கலாம் - சமாதான வழிமுறைக்கு அவர்கள் செவிசாய்க்காது போனால்.

● எம். யாதவன், திருச்சி. ❐

**? தமிழக முதல்வர் ஜெ. பொறுப்பற்ற முறையில் 1000 கார்களுடன் பவனி வருவதை எதிர்த்துத் தான் தீக்குளிக்கப் போவதாக என் நண்பன் கூறுகிறான்..?**

! முன்பு பர்கூர் பவனியையே எல்லாரும் கண்டித்தாகி விட்டது. ஒரு பயனும் இல்லை. 'நீங்கள் என்ன சொல்வது நான் என்ன கேட்பது' என்பது போல் 'ஒன்ஸ் மோர்' நடக்கிறது. தீக்குளி அது இது என்றால் ஆயிரம் கார் பவனி இரண்டாயிரமாக உயரக்கூடும்! எதற்கு வீணான உயிர்த் தியாகம்?

● அ. முஸ்தபா, தக்கோலம்.

**? இன்று வசூல் மன்னன் யார்?**

! ராஜேஷ்கன்னா என்று காங்கிரஸ் எண்ணுகிறது. சத்ருக்னன் சின்ஹா என்று பி.ஜே.பி. கருதுகிறது!

● ஆர். மூர்த்தி, கல்லிடைக்குறிச்சி.

**? சென்னையில் வாலிபப் பருவத்து மாணவ, மாணவிகள் கீழ்த்தரமான செயல்களில் ஈடுபட்டு அழிவுப் பாதையை நோக்கிப் போய்க் கொண்டிருப்பதாக இந்தியா டுடே கட்டுரை வெளியிட்டுள்ளதே?**

! அமெரிக்கா டுடே அளவுக்கு சென்னை டுடேயைப் பெரிதாக்கிக் காட்டும் சக்தி வாய்ந்த பூதக் கண்ணாடி அவர்களிடம் இருக்கிறது!

● கே. ரமணி, வேலூர்.

**? தமிழ்நாடு அரசு மீண்டும் ஹெல்மெட் அணிவதைக் கட்டாயமாக்கும் சட்டம் கொண்டு வர உள்ளதாகச் செய்திகள் வந்துள்ளனவே, உங்கள் கருத்து என்ன?**

! ஹெல்மெட் அணிவது நல்லது என்பதில் இரண்டாவது கருத்துக்கு இடமில்லை. இது ஸ்கூட்டர் வைத்திருக்கும் - வாங்கும் ஒவ்வொருவருக்கும் தெரிவிக்கப்பட வேண்டும். ஆனால் கட்டாயமாக்குதல் கூடாது. அது சிலர் காட்டில் மட்டும் மழை பெய்ய வழிவகுக்கும் என்பது ஒரு காரணம். ஹெல்மெட் அணிவதே சில உடல் கோளாறுகளைச் சிலருக்கு உண்டாக்குகிறது என்பது மற்றொரு காரணம்.



☛ மீண்டும் 1000 கார்....



☛ நிர்ப்பந்த நெளிவு



☛ வைக்கிய விதை...



☛ ஐந்தாண்டு ஆட்சி?

● போத்தனூர் புலிச்சோழன், கோவை.

**? ஐந்து ஆண்டுகளுக்கும் காங்கிரசே ஆட்சியிலிருக்கும் என்கிற பிரதமரின் நம்பிக்கை பற்றி?**

! நம்பிக்கை பொய்க் காத விதத்தில் அவர் நடந்து கொள்ளட்டும்! திறமையான நல்லாட்சி வழங்கினால் யார் கவிழ்க்க எண்ணுவார்கள்? அப்படி கவிழ்த்தால் மக்களின் வெறுப்பைச் சம்பாதித்துக் கொண்டதாகும் என்று அஞ்ச மாட்டார்களா!

● ஜி. வெங்கி, குத்தாலம்.

**? வாழப்பாடியார் என்ன செய்து கொண்டிருக்கிறார்?**

! பஸ் கட்டண உயர்வை எதிர்க்க வேண்டிய நிர்ப்பந்தத்தில் நெளிந்து கொண்டிருக்கிறார்!

● கே. ஆர். விஜயா, கோவை.

**? மாடிப்படி ஏறி தபால் பட்டுவாடா செய்ய மறுக்கும் தபால் துறையினர் ஓடும் ரயிலில் தாவி ஏறித் தந்தி பட்டுவாடா செய்தது குறித்து?**

! பின்னதற்குப் பாராட்டு. முன்னதில் உள்ள நியாயத்தை உணர்ந்து ஃப்ளாட்களில் வசிப்போர் கீழேயே தபால் பெட்டிகளை நிறுவி ஒத்துழைப்பது நல்லது.

# பங்கு மார்க்கெட்டில் புதிய உற்சாகம்!

## உங்கள் செல்வம் :

"**நா**ன் பங்குகள் வாங்க விரும்புகிறேன். ஆனால் எப்படி வாங்குவது என்று புரியவில்லை; விளக்கவும்" என்று பலர் எழுதியிருக்கிறார்கள்.



ஆரம்பத்திலேயே நான் சொன்னேன் : பெரிய நகரங்களில் ஷேர் புரோக்கர் நிறுவனங்கள் உள்ளன; இவை பங்குகளுக்கு விண்ணப்பிக்க அச்சடித்த படிவங்களை இலவசமாக விநியோகிக்கின்றன என்று. இந்த நிறுவனங்களுடன் தொடர்பு கொண்டு பெயர், விலாசம் பதிவு செய்து கொண்டால் விண்ணப்பப் படிவங்களை இலவசமாகவே அனுப்பி வைப்பார்கள்.

இந்த விண்ணப்பப் படிவங்களில் குறிப்பிட்ட ஷேர் புரோக்கர் நிறுவனத்தின் பெயரும் குறியீட்டு எண்ணும் அச்சாகியிருக்கும். எனவே உங்களுக்குப் பங்குகள் ஒதுக்கப்பட்டால் அதற்குரிய கமிஷன் தொகை ஷேர் புரோக்கர் நிறுவனத்துக்குப் போய்ச் சேரும். மூலதனம் திரட்டும் தொழில் நிறுவனம், இந்தக் கமிஷனை ஷேர் புரோக்கருக்குக் கொடுத்து விடும். இதனால்தான் ஷேர் புரோக்கர்கள் உங்களிடம் தங்கள் சேவைக்காகப் பணம் ஏதும் பெறுவதில்லை.

துணை மார்க்கெட்டில் நீங்கள் ஏற்கெனவே வாங்கியுள்ள ஷேர்களை இன்னொருவருக்கு விற்க விரும்பினால், அப்படி விற்கும் போது, ஷேர் புரோக்கர்கள், பங்குகளை வாங்குவோரிடம் கமிஷன் பெறுகிறார்கள்.

ஷேர் புரோக்கர்களுக்கு ஆதாயம் மிக்க வேறு பல பணிகளும் உண்டு.

பெரிய தொழிலகங்கள் மூலதனம் திரட்ட நாளிதழ்களில் விளம்பரம் செய்யும் போது, அவர்கள் நியமித்துள்ள நிர்வாகிகள், மற்றும் வங்கிகளின் விலாசங்களையும் அந்த விளம்பரத்தில் தருவார்கள். அவர்களிடமிருந்தும் விண்ணப்பப் படிவங்களைப் பெறலாம்.

இல்லாவிட்டால் சென்னையில் உள்ள பாட்டர்ஸன் கம்பெனி (PATERSON & CO. P.B. 48, MADRAS 600 001) போன்ற பெரிய ஷேர் புரோக்கர் நிறுவனங்களுடன் நீங்கள் தொடர்பு கொள்ளலாம்.

விண்ணப்பப் படிவத்தின் பின்புறம் எப்படி அதைப் பூர்த்தி செய்ய வேண்டும்; யார் பெயருக்குக் காசோலை எழுதி எந்த வங்கியில் கட்ட வேண்டும்; தபாலில் அனுப்புவதானால் எப்படி; நேரில் தருவதானால் எவ்வாறு என்றெல்லாம் விவரம் தரப்பட்டிருக்கும். அதைப் படித்துப் பார்த்துச் செயல்படலாம். நுணுக்கமான அந்த எழுத்துக்களைப் படிக்க, வரிசை வரிசையாக நிபந்தனைகளைப் பார்க்க ஏதோ தலை சுற்றுவது போல் தோன்றும். ஆனால் ஒரு முறை செயல்பட்டுப் பங்குகளுக்கு விண்ணப்பித்து விட்டால், பிறகு 'இது ஒன்றும் கஷ்டமான காரியம் இல்லை; ரொம்ப இலகுவான விஷயம்' என்பது புரிந்து போகும். அதிலும் A/C Payee காசோலை தான் தரப் போகிறீர்களாதலால் ஏமாந்து போக இடமில்லை. - பிரதான மார்க்கெட்டைப் பொறுத்தமட்டில்.

துணை மார்க்கெட் விஷயத்தில் ஓரளவு எச்சரிக்கை தேவை. வாங்கிய ஷேர்களை விற்கும் போது, நம்பகமான பெரிய ஷேர் புரோக்கர் நிறுவனங்களை நாடுவது நல்லது. 'ஷேர்புரோக்கர்' என்று தன்னை வர்ணித்துக் கொள்ளும் யாரிடமாவது மதிப்பு மிக்க ஷேர் பத்திரங்களைக் கொடுத்து ஏமாந்து விடக் கூடாது.

கடந்த 1989, 1990ம் ஆண்டுகளில் நமது தேசத்தில் பிரதான பங்கு மார்க்கெட்டில் திரட்டப்பட்ட மூலதனம் எவ்வளவு தெரியுமா? 20,000 கோடி! அதாவது ஆண்டு ஒன்றுக்குப் பத்தாயிரம் கோடி! இந்த அளவுக்குப் பல்வேறு தொழிலகங்கள் தொடங்கவோ, அல்லது, ஏற்கெனவே உள்ள தொழிலகங்களின் விரிவாக்கத்துக்கோ மூலதனம் திரட்டப்பட்டுள்ளது!

ஆனால் 1991ம் ஆண்டின் தொடக்கத்தில் மூலதனம் திரட்டும் பணி பின்னடைவு கண்டது. காரணம், அரசியல் சூழ்நிலையில் ஒரு நிச்சயமற்ற தன்மை. 'புதிய மைனாரிடி அரசு அமையுமா? நிலைத்து நின்று ஆட்சி புரியுமா?' என்றெல்லாம் கவலைகள் ஒருபுறம். வளைகுடா போர் காரணமாக பெட்ரோலியம் விலை திபுதிபு'வென்று உயர, நமது அந்நியச் செலாவணி நிலையில் ஏற்பட்ட நெருக்கடி மறுபுறம்.

எல்லாமாகச் சேர்ந்து, தொழில் துறையில் ஒரு சோர்வை உருவாக்கின. ஆனால் சமீப காலமாக இந்த நிலை மாறி, புதிய உற்சாகம் பிறந்துள்ளது. ஏராளமான புதிய தொழிலகங்கள் தொடங்கப்பட இருக்கின்றன. மக்களிடம் மூலதனம் திரட்டவும் முன் வரப் போகின்றன. விவரங்கள் அடுத்த வாரம்!

- வி. கோபாலன்



# டிக் டிரேஸி: திரைப்படமான படக்கதை!

அமெரிக்க இளைஞன் செஸ்டர் கோல்ட் ஐம்பது டாலர் பணத்துடன், பிழைப்புத் தேடி வீட்டை விட்டு வெளியேறினான். கார்ட்டூன் வரையும் திறமை மட்டுமே துணை.

சிகாகோ நகரை அடைந்து விளம்பர நிறுவன ஓவியராகப் பணியாற்றியபடி கார்ட்டூன்களும் போடலானார். சுமார் அறுபது கார்டூன் தொடர்களை வடிவமைத்துப் பத்திரிகைகளுக்கு அனுப்பி, யாவும் நிராகரிக்கப் பெற்றார். பத்து வருடப் போராட்டத்துக்குப் பின், கோல்ட் உருவாக்கிய ஒரு கார்டூன் தொடர் 'டெட்ராய்ட் நியூஸ்' நாளிதழில் வெளிவர ஆரம்பித்தது. Dick Tracy என்ற துப்பறியும் நிபுணன்தான் அதன் கதாநாயகன். சிகாகோ நகரச் செய்தித்தாள்களில் வெளியான 'கிரைம்' செய்திகளே கதைக் கருவாயின. ஒரே வித்தியாசம் - சிகாகோ போலீஸால் கண்டுபிடிக்க முடியாத குற்றவாளிகளை டிக் டிரேஸி கண்டுபிடித்தான். அந்த முயற்சியில் சூரத்தனமாகச் சண்டை போட்டான், போராடினான். நேர்மையும், கடமையுணர்வும், நெஞ்சுறுதியும் படைத்த டிக் டிரேஸி விரைவிலேயே லட்சக் கணக்கான வாசகர்களின் அபிமான கதாபாத்திரமானான்.

டிக் டிரேஸி இப்போது திரையில் தோன்றுகிறான். அக் கதா பாத்திரத்தில் நடிப்பதுடன் திரைப்படத்தை இயக்கித் தயாரித்துள்ளவர், பல விருதுகளைப் பெற்றுள்ள வாரன் பீட்டி (Warren Beatty).

ஆண்டாண்டு காலமாக கார்டூன் சித்திரமாகவே பார்த்துப் பழகிய கதாபாத்திரங்களை, அதே ஜாடை, நடை, உடை, பாவனையுடன் திரையில் காண்பிக்க ஏராளமாகப் பாடுபட்டிருக்கிறார்கள். கார்டூனில் ஓவியர் பயன்படுத்திய நிறங்களை மட்டுமே படத்தில் பயன்படுத்தியுள்ளார்கள். முகச் சாயலில் ஒற்றுமை இருக்க வேண்டும் என்பதற்காக, முகமூடி போன்ற அமைப்பை ஏற்படுத்தினார்கள்.

ஷூட்டிங் தினங்களில், இந்த மேக்கப் போடவே நான்கு மணி நேரம் செலவாகும் என்பதால் அதிகாலையில் வேலை தொடங்கிவிடும். படப்பிடிப்பின் இடைவெளியில் அசங்கினாலோ, தூங்கினாலோ, சாப்பிட்டாலோ, மேக் கப் உருக்குலைந்து போகும் என்பதை நடிகர்களுக்குச் சதா நினைவூட்டிக் கொண்டிருக்கவே ஓர் ஊழியர் குழு நியமிக்கப்பட்டிருந்தது! தினமும் பதின்மூன்று மணி நேரம் இந்தக் கட்டுப்பட்ட நிலை. ஷூட்டிங் முடிந்து மேக்கப் கலைக்க ஒன்றரை மணி நேரம் பிடிக்கும். உதிர்த்து எடுக்கப்படும் முகமூடிப் பாகங்களை மீண்டும் பயன்படுத்த முடியாது. திரும்பவும் புதிதாக அச்சில் வார்த்துத்தான் தயாரிக்க வேண்டும்!

பிரபல பாப் இசைப் பாடகி மடோனாவை இப் படத்தில் நடிக்க ஒப்பந்தம் செய்தார்கள். பழைய காலத்து நைட் கிளப்பில் பாடும் பெண்ணின் கதாபாத்திரம். மடோனாவின் இயல்பான துள்ளலும் பாட்டும் அவ்வப்போது தலைகாட்ட, ''இவ்வளவு நன்றாகப் பாடாதே'' என்று அவருக்கு அடிக்கடி நினைவூட்ட வேண்டியதாயிற்று!

டைரக்ஷன் முதல் மேக்கப் வரை, பல்வேறு அம்சங்களுக்காக மொத்தம் 68 ஆஸ்கார் பரிசுகளுக்கு 'டிக் டிரேஸி' திரைப்படம் சிபாரிசு செய்யப்பட்டுள்ளது.... இவற்றுள் எத்தனை அம்சங்களுக்கு இறுதியில் ஆஸ்கார் கிடைக்கும் என்பது ஒருபுறமிருந்தாலும், ஆஸ்காருக்கு ஒரு பரிந்துரை கிடைப்பதே குதிரைக் கொம்பு என்பதை நினைவு கொண்டால் இது எப்பேர்ப்பட்ட சாதனை என்பது புரியும்.

- எஸ்ஸார்

# இருபதாம் தேதி...

இருபதாம் தேதி. அதற்குள் மளிகை சாமான் தீர்ந்து விட்டது என்று கணேஷின் சகதர்மிணி அபாயக் குரல் கொடுத்து விட்டாள். போன மாதம் இப்படித்தான். கரண்ட் பில்லைக் கட்டுவதற்குள் முழி பிதுங்கி விட்டது. ஒவ்வொரு மாதமும் இதுபோல் குடும்ப பட்ஜெட் எக்கச்சக்கமாய் உதைக்கிறது.

கணேஷ் தீவிரமாய் யோசித்தான். அப்படியும் அவனோ அவன் மனைவி கலாவோ செலவாளிகள் அல்ல. அவன் குடும்பம், மனைவி, தாயார், இரண்டு குழந்தைகள் என்று ஐவரில் அடக்கம். கணேஷுக்கும் அரியர்ஸ் பணம், சொசைட்டி லோன் என்று பெரிய தொகை கைக்கு வரும் போதெல்லாம் ஒரு மூட்டை அரிசி, அரை மூட்டை பருப்பு என்று நாலைந்து மாதங்களுக்குத் தேவையான மளிகையை வாங்கிப் போட்டு விடுவான். பிறகு மாதச் சம்பளத்தில் லோன் பிடித்தம் போக மீதமுள்ளது மற்ற செலவுகளுக்கு. அப்படியிருந்தும்...



கணேஷ் கவலைகளை மூட்டை கட்டி வைத்துவிட்டுக் குளிக்கப் போனான். பிளாஸ்டிக் வாளியில் பைப்பைத் திறந்து விட்ட போது, பாத்ரூமுக்கு வெளியே நின்று கலா குரல் கொடுத்தாள்.

''ஏங்க, நீங்கள் பாட்டுக்கு டேங்க்கிலே இருக்கிற தண்ணீரையெல்லாம் காலியாக்கி விடாதீர்கள். அப்புறம் தெருக் குழாய்க்கு நான்தான் குடத்துடன் ஓடணும். அளவாய் இரண்டே வாளித் தண்ணீரில் குளியுங்கள்.''

கணேஷ் ஆச்சரியத்துடன் சொன்னான். ''தினமும் இரண்டு வாளித் தண்ணீரில்தானே குளிக்கிறேன்!''

கலாவின் அலுப்பான பதில் : ''பைப்பைத் திறந்து விட்டு வாளியில் இருந்து மொண்டு மொண்டு ஊற்றிக் கொள்வதால் உங்களுக்கு அளவு தெரியவில்லை. ஒவ்வொரு வாளியாய்த் தண்ணீர் பிடித்துக் குளியுங்கள். அப்போதுதான் எத்தனை வாளித் தண்ணீர் என்பது உங்களுக்கே தெரியும்.''

கேட்டுக் கொண்டிருந்த கணேஷுக்குப் பொறி தட்டியது.

குடும்ப பட்ஜெட்டும் இதே போலத்தானோ? அவன் ஒரு மாதத்துக்கு இவ்வளவு என்று வரைமுறை இல்லாமல் ஒட்டுமொத்தமாய் மளிகை வாங்கிப் போட்டு விடுகிறான். கலாவும் தினசரி டிபன், பலகாரம் என்று சமையலில் தாராளம் காட்டுகிறாள். இப்படி அளவு தெரியாமல் செலவழிப்பதால்தான் வில்லங்கமே. ஒரு மாதத்துக்கு உரிய மளிகையை மட்டும் கரெக்டாக வாங்கிப் போட்டால் சிக்கனம் தன்னால் வாராதோ?

சிக்கலுக்குத் தீர்வு கண்டுபிடித்து விட்ட நிம்மதியுடன் குளிக்க ஆரம்பித்தான், கணேஷ்!

- பசு. தனபாலன்



# பட்டுக்கோட்டையார் வைத்த குட்டு!

ஆறாயிரம் எதிர்பார்த்த இடத்தில் இரண்டாயிரம் தருகிறேன் என்று சொன்னது என் தன்மானத்துக்கு ஓர் இழுக்காக நான் கருதவில்லை. பணம் எப்போதுமே எனக்குப் பிரதானமான விஷயமாகத் தோன்றியதில்லை. 'நம்முடைய ஆற்றலும் கலையும் உரிய மதிப்புப் பெறுகிறதா என்பது தான் முக்கியம்' என்று கருதியவன் நான்.

மாடர்ன் தியேட்டர்ஸில் எனக்கு இரண்டாயிரம்தான் தந்தார்கள் என்று யாருக்குத் தெரியப் போகிறது? ஆனால் மாடர்ன் தியேட்டர்ஸுக்குக் கதை எழுதும் வாய்ப்புப் பெற்றேன் என்பது எல்லோருக்கும் தெரியவரும். அது அளிக்கப் போகும் கௌரவம் வெறும் நாலாயிரம் தானா மதிப்புப் பெறும்?

இரண்டாயிரத்துக்கு என்னைச் சம்மதிக்க வைத்து விட்டதற்காக பாலு முதலியார் முகத்தில் புன்னகை அரும்பியது.

''சரி, அட்வான்ஸ் எவ்வளவு வேணும்? கேட்டு வாங்கிக்குங்க'' என்றார்.

ஆனால் அவரை வென்று விட்ட புன்னகை என் முகத்திலும் மலர்ந்தது. ஏனென்றால் அவரைப் போல் நான் பணத்தை முக்கியமாகக் கருதவில்லையே! ''ஒரு கண்டிஷன்'' என்றேன். ''எனக்கு ஒரு பைசாக் கூட அட்வான்ஸ் வேண்டாம். இங்கே வந்து போகும் போது ஏற்படக்கூடிய கைச் செலவுகளுக்கு மட்டும் அவ்வப்போது பணம் கொடுங்கள். படம் முடிந்த பிறகு கணக்குப் பார்த்து மீதியைக் கொடுங்கள்'' என்றேன்.

பாலு முதலியார் தலையாட்டினார்.

அந்தப் படம் மகேசுவரி. படம் முடிந்த பிறகு கணக்குப் பார்த்து ரூ 1436 பெற்றுக் கொண்டேன்.

சன்மானம் குறைந்ததால் எனக்கு நஷ்டம் ஏதும் ஏற்படவில்லை. அதை விடப் பல மடங்கு ஆதாயமே கிடைத்தது! எப்படியெனில் மாடர்ன் தியேட்டர்ஸ் சுந்தரம் ஒரு மிகப் பெரிய நூலகம் வைத்திருந்தார். அத்தனையும் சினிமா தயாரிப்பு பற்றிய நூல்கள்! திரைப்பட நுணுக்கங்கள் பற்றி பல நாட்டு அறிஞர்கள் எழுதிய 'புத்தகங்கள். நேரம் கிடைத்தபோதெல்லாம் நான் நூலகத்தில் போய் உட்கார்ந்து கொண்டு, அந்த நூல்களைப் படிப்பேன்.

மாடர்ன் தியேட்டர்ஸில் இரண்டு வரி வசனம் மாற்ற வேண்டுமானாலும் சென்னையிலிருந்து என்னை அழைத்துப் போவார்கள். நானும் புத்தகம் படிக்கலாமே என்பதற்காகவே அலுத்துக் கொள்ளாமல் புறப்பட்டு விடுவேன்!

அந்த நூலகத்தில் புடோக்கி என்ற ருஷ்ய சினிமா எழுத்தாளரின் பல நூல்கள் இருந்தன. அவரிடம் ஒரு சிறப்பு அம்சம் என்னவென்றால், எப்படி சினிமா எடுக்க வேண்டும் என்று சொல்வதை விட அதிகமாக, எப்படியெல்லாம் எடுக்கக் கூடாது என்று சொல்வார்!

அதாவது, சராசரி டைரக்டர்கள் செய்து விடக்கூடிய தவறுகளையெல்லாம் பட்டியலிட்டுத் திருத்தி, பிறகு சரியான வழிகாட்டுவார். இந்தப் பாணி எனக்கு மிகவும் பிடித்திருந்தது மட்டுமல்ல; என்னை நானே சுலபமாக வளர்த்துக் கொள்ளப் பெரிதும் உதவியது. என்ன தவறுகள் நிகழக்கூடும் என்று தெரிந்தால்தானே அவற்றைத் தவிர்க்க முடியும்! அதனால் ரொம்ப ரசனையாக அவர் நூல்கள் பலவற்றைப் பலமுறை படித்தேன்.

என் திரை உலகின் மானசீக குரு என்று அவரை மட்டுமல்ல; மாடர்ன் தியேட்டர்ஸ் நூலகத்தில் இருந்த பல புத்தகங்களின் ஆசிரியர்களையும் கருது கிறேன்.

**டைரக்டர் ஸ்ரீதர்**

இவ்வாறு நான் நஷ்டத்தை லாபமாக்கிக் கொண்ட விவரம் பாலு முதலியாருக்குத் தெரிய நியாயம் இல்லை!

சினிமாவுக்குக் கதை எழுத வேண்டும் என்று நினைப்பவர்கள் முதலில் மனத்தளவில் அதை நிறைய அசை போட வேண்டும். அப்புறமும் எழுத ஆரம்பிக்கக் கூடாது. நண்பர்களிடம் அதைச் சொல்ல வேண்டும். நண்பர்கள் என்றால், ''அடடா அபாரம்'' என்று பேசும் முகஸ்துதியாளர்கள் அல்ல. நம் கதையை அக்குவேறு ஆணிவேறாகப் பிரித்து, அலசி விமர்சிக்கும் துணிவுள்ள நண்பர்கள்.




அந்த நண்பர்களின் காட்டமான விமர்சனத்தை ஏற்கும் மனப்பக்குவத்தை நாம் முதலில் பெற வேண்டும். ''என்னடா இப்படி சொல்லி விட்டானே'' என்று கருதாமல், ''ஏன் சொன்னான்? அதில் என்ன நியாயம் இருக்கிறது?'' என்று எண்ணிப் பார்க்கும் சகிப்புத்தன்மை நமக்கு இருக்க வேண்டும்.

ஒரு சமயம் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் அவர்களிடம் பேசிக் கொண்டிருந்த போது, கல்யாணப் பரிசு கதையை அவரிடம் விரிவாகச் சொன்னேன்.

''என்னய்யா பெரிசா நீட்டி முழக்கிக் கிட்டு... காதலிலே தோல்வியுற்றாள் கன்னி யொருத்தி... கலங்குகிறாள் அவனை நெஞ்சில் நிறுத்தி.... இதுதானேய்யா உன் கதை?'' என்று கேட்டார்.

நான் பிரமித்துப் போனேன். மாதக் கணக்கில் நான் யோசித்து யோசித்து உருவாக்கிய கதையை இரண்டே வரிகளில் அடக்கி விட்டாரே!

எனக்கு முதலில் ஏமாற்றமாகத்தான் இருந்தது. சற்று யோசிக்க, 'அவர் சொன்னது உண்மைதானே' என்று தோன்றியது. மேலும் யோசிக்க, 'அந்த வரிகளையே பயன்படுத்திக் கொண்டால் என்ன?' என்றும் எண்ணம் எழுந்தது!

உடனே அவரிடம் மறுபடியும் போய், ''எங்கே, இன்னொருதரம் அந்த விமர்சன வரிகளைச் சொல்லுங்கள்!'' என்றேன். சொன்னார். ''இதையே பாடலாக்கித் தர முடியுமா?'' என்று கேட்டேன்.

''ஓ செய்யலாமே'' என்றார். உருவாக்கியும் கொடுத்தார். அதையே 'தீம் ஸாங்'காகப் பயன்படுத்தத் தீர்மானித்தேன்.

இடைவேளைக்கு முன்னால் இந்தப் பாடல் ஒலிக்கும். கதையும் அந்த அளவுக்கு வளர்ந்திருக்கும்.

படத்தின் முடிவில் அதே மெட்டில், சிறிது மாற்றத்துடன் பாடல் மீண்டும் ஒலிக்கும்:

''காதலிலே தோல்வியுற்றான் காளை ஒருவன்...''

பாடலுடன் அதன் பாவத்தை உணர்த்தும் சிறப்பான மெட்டும் சேர, ''கல்யாணப் பரிசு'' படம் பார்த்த அனைவரது நெஞ்சத்தையும் விட்டு அகலாத பாடலாகி விட்டது அது. படத்தின் வெற்றிக்குப் பல காரணங்களுள் ஒன்றாக விளங்கியது. இன்றும் கூட, ''கல்யாணப் பரிசு'' என்றால் பலருக்கு இந்தப் பாடல் இதயத்தில் பீறிட்டு எழும்.

படத்தில் இவ்வளவு முக்கியமான அம்சம் இடம்பெறக் காரணம் என்ன? அடிப்படையில் ஒரு விமர்சனம்! ஆகவேதான் விமர்சனத்தைக் கண்டு பயப்படவே கூடாது. நமது சிந்தனா சக்தியை மேலும் ஊக்குவிக்கும் கருவியாக அதைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். அப்போது புதுமைகள் செய்ய முடியும்.

ஆனால் ஒன்று! எல்லாப் புதுமைகளுமே ஒரே மாதிரி வரவேற்பைப் பெறும் என்றும் நம்ப முடியாது! புதுமைகள் என்பது சோதனைச் சாலையில் பரிசோதனை செய்து பார்ப்பது போலத்தான். வெற்றியும் கிட்டலாம்; தோல்வியும் அடையலாம். தோல்வி கண்டால் நம்மைத் திருத்திக் கொண்டு அடுத்த படத்தில் ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமே தவிர, 'புதுமையே வேண்டாம்' என்று பயந்து ஒதுங்கி விடக் கூடாது. அப்படி ஒதுங்கினால் கலையில் வளர்ச்சி இராது.

இந்த அடிப்படையில் சிந்தித்து, பயப்படாமல் நான் கையாண்ட ஒரு புதுமையான முயற்சிதான் 'ரஷ்யன் கோணம்'!

அது என்ன, 'ரஷ்யன் கோணம்'? அது எனக்குத் தேடித் தந்தது வெற்றியா தோல்வியா? அடுத்த வாரம் சொல்கிறேனே!

# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...

கல்கி, நவம்பர் 1, 1941

பரதநாட்டியக் கலை பயிலுவோரிடையே இன்று கலாநிதி நாராயணன் என்றால் தெரியாதவர் இருக்க முடியாது. குறிப்பாக அபிநயக் கலையைப் பயிற்றுவிக்க அவரை விடச் சிறந்த ஆசான் இல்லை என்று கருதப்படுகிறது. இன்று நிருத்திய சூடாமணி, பத்மபூஷன், சங்கீத நாடக அகாடமியின் விருது முதலியவற்றைப் பெற்று விட்ட கலாநிதி ஐம்பது ஆண்டுகளுக்கு முன் கல்கி மேலட்டையில் சிறுமியாகத் தோற்றமளிக்கிறார்.

## பிறந்த நாட்டுக்குச் சிறப்பு

இந்த இதழின் மேலட்டையை அலங்கரிக்கும் குழந்தையின் பெயர் கலாநிதி. பத்து வயதுக்குள் குமாரி கலாநிதி பரத நாட்டியக் கலையில் மிகவும் சிறப் படைந்து விட்டாள்; அந்தக் கலைச் சிறப்பைக் கொண்டு நிதி சேர்த்தாள்; சேர்த்த நிதியை மறுபடியும் கலை வளர்ச்சிக்கே கொடுத்தாள். திருவல்லிக்கேணி சாமாராவ் பள்ளிக் கூடத்தில் ''கலாநிதி ஹால்'' என்று ஒரு மண்டபம் கட்டப்பட்டிருக்கிறது. இதற்குச் செலவான ரூபாய் மூவாயிரமும் குமாரி கலாநிதி பரத நாட்டியக் கச்சேரி செய்து சேர்த்துக் கொடுத்த பணம். இத்தகைய குழந்தையைப் பெற்ற தாய், தந்தையர் கொடுத்து வைத்த பாக்கியசாலிகள் அல்லவா? குமாரி கலாநிதியைப் போன்ற அநேக கலாநிதிகள் தமிழகத்தில் தோன்றிப் பெற்றவர்களுக்கும் பிறந்த நாட்டுக்கும் சிறப்பளிக்கட்டும்!




- அட்டைப்பட விளக்கம்

## ஆண்டவன் செயல்

''நான் ஜெயிலுக்குப் போவதற்கு முன்னால் ஒரு பிளான் தயாரித்துக் கொடுத்து விட்டுப் போனேன்; ஜெயிலிலிருந்து வெளியே வந்து பார்த்தால் பிளான் அப்படியே நிறைவேறியிருக்கிறது. நாம் போடும் எல்லாப் பிளான்களும் இவ்வளவு சுலபமாக நிறைவேறுமானால் எவ்வளவு நன்றாயிருக்கும்?'' என்று ராஜாஜி சொன்னார். பழனியில் நந்தனார் விடுதியைத் திறந்து வைக்கும் போது இவ்விதம் தமது மகிழ்ச்சியை வெளியிட்டார். தமிழ் நாட்டில் எத்தனையோ திவ்ய ஸ்தலங்களும் திருக்கோயில்களும் இருந்தபோதிலும், அவற்றுள் இரண்டு கோவில்கள் மிகவும் சக்தி வாய்ந்தவை என்று கருதப்படுகின்றன. அவை மதுரை மீனாக்ஷி அம்மன் கோவிலும், பழனி ஆண்டவர் கோவிலுந்தான். பாருங்கள்; மதுரை மீனாட்சி அம்மனுக்கும் பழனி ஆண்டவருக்குந்தானே தங்களுடைய திருக் கோவில்களுக்குள் ஹரிஜன பக்தர்களை அழைத்துக் கொள்ள முடிந்தது? கண்கண்ட சக்திவாய்ந்த இந்த இரண்டு தெய்வங்களில் இப்போது பழனியாண்டவர் கொஞ்சம் முந்திக் கொண்டு விட்டார். தம்மைத் தரிசிக்க வரும் ஹரிஜன பக்தர்களுக்கு ஒரு விடுதி அமைக்க வேண்டுமென்று ஆண்டவன் திருவுளங் கொண்டார். ராஜாஜியின் மனதில் புகுந்து அதற்கு ஒரு பிளான் போடச் செய்தார்.

- என்ன சேதி

## டி. கே. சி. பேச்சு

பிறகு, ராஜாஜி அக்கிராசன பீடத்தில் அமர்ந்து ஒன்றரை மணி நேரம் அளவற்ற ஆவேசத்துடன் தமிழ்ப் பாட்டு இயக்கத்தின் சகல அம்சங்களையும் பற்றி சாங்கோபாங்கமாய் பேசினார்.



என்ன? ராஜாஜியா பேசினார்!

ஆமாம்; ராஜாஜி தான் பேசினார். ஆனால் டி. கே. சி.யின் உடம்பிலிருந்து கொண்டு பேசினார். (இப்படி நான் சொல்வதற்கு ஆதாரம் ராஜாஜியேதான். ''டி. கே. சி. யின் உடம்பில் நானே இருப்பதாகவும், அவர் சொல்வதையெல்லாம் நான் சொல்வதாகவும் கொள்ள வேண்டியது'' என்று ராஜாஜி மகாநாட்டுக்குச் செய்தி அனுப்பியிருந்தார்.)

- ஆடல் பாடல் - கர்நாடகம்

## சந்தேகமில்லை

இருநாள் கூட்டத்தில் ஒருவர் தன் மனைவியென்று நினைத்துக் கொண்டு வேறொரு ஸ்திரீயை ''இந்தா!'' என்று கூப்

பிட்டு விட்டார். அந்த ஸ்திரீ கோபமாகத் திரும்பிப் பார்த்து, ''மூஞ்சியைப் பாரு! மூஞ்சியை...'' என்றெல்லாம் திட்ட ஆரம்பித்தாள்.

அந்த மனிதன் உடனே ''தவறுதலாகக் கூப்பிட்டு விட்டேன். மன்னிக்க வேண்டும். என் மனைவியைப் போல் நீங்கள் இல்லாவிட்டாலும், அவளைப் போலவே பேசுகிறீர்கள்!'' என்றான்.

**- தயவுசெய்து சிரியுங்கள்!**

## மனசை விட்டுப் போகவில்லை

**மா**லை நேரத்தில் கன்னி மாடத்து உப்பரிகையில் சீதை நின்றது, நமக்குத் தெரியும். அப்போது வீதியில் அபூர்வ அழகு வாய்ந்த இளைஞன் ஒருவன் வந்தான். இருவர் கண்ணும் சந்தித்தன : இருவருக்கும் உள்ளம் பறிபோய் விட்டது. இளைஞன் நடந்து சென்று மறைந்து போய் விடுகிறான். ஆனாலும் சீதையின் மனசை விட்டுப் போகவில்லை. இளைஞனது ஊர் பேர் ஒன்றுந் தெரியாது. இரவெல்லாம் அவனைப் பற்றியே எண்ணிக் கொண்டிருக்கிறாள்.

**நாண்உ லாவு வில்லி னோடு**
**பூண்உ லாவு பாணி யும்,**
**தூண்உ லாவு தோளும்; வாளி**
**யோடு லாவு தூணி யும்,**
**வான்நி லாவின் நூல்உ லாவு**
**மாலை மார்பும், மீன வும்**
**காண லாகும் ஆகின் ஆவி**
**காண லாகும் ஆகு மே**

*(நாண் : வில்நாண்; பூண்: கைக்கடகம்; பாணி: கை; வாளி: அம்பு; தூணி: அம்பு வைக்கும் கூடு: அம்பராத் தூணி; வான் நிலா: அதி பிரகாசமான நூல் போன்ற நிலாக் கிரணம்; நூல்: பூணூல்; ஆவி: உயிர்; நிச்சயமாக உயிர் போய் விடும் போல் தோன்றுகிறது.)*

செய்யுளிலுள்ள சொல்லும் இசையும் நமக்கே சோர்வையும் மயக்கத்தையும் உண்டாக்குகின்றன. (செய்யுளை ரொம்பச் சவுக்கத்தில் பாடிப் பார்க்க வேணும்.)

**- கம்பர் தரும் காட்சி - டி. கே. சி.**

## கன்றின் குரல் கேட்ட பசு

**எ**ன்னைப் போன்றவர்களுக்கு, ''மூன்று மாதம் சிறைவாசம்'' என்றால், அது மூன்று மாதந்தான்; ஒன்பது மாதம் என்றாலும் அது ஒன்பது மாதந்தான். ஆனால், ஸ்ரீ சத்தியமூர்த்திக்கோ ''ஒன்பது மாதச் சிறை'' என்பது ''ஒன்பது வருஷச் சிறை'' என்றே சொல்ல வேண்டும். இதன் காரணங்களாவன : 1. அவருடைய தேக அசௌக்ய நிலைமை; 2. அரசியல் சம்பந்தமான பொதுக் கூட்டங்கள், பிரசங்கங்கள், வாதப் பிரதிவாதங்கள் இல்லாமல் வாழ்க்கை நடத்துவது அவருக்கு நரக வேதனையாய்த் தோன்றுவது; 3. குடும்பத்தில் அவருக்குள்ள பற்றுதல்; 4. நல்ல பொருள்களில் அவருக்குள்ள அபிமானம்.



நம்மெல்லாருக்கும் நமது பந்து மித்திரர்களிடம் ஆசையுண்டு; மனைவி மக்களிடம் பற்றுதலும் உண்டு. ஆனால், ஸ்ரீ சத்தியமூர்த்திக்கு அவருடைய ஏக புதல்வியிடம் உள்ள வாஞ்சையைப் போல் நான் பார்த்ததேயில்லை. 'இண்டர்வ்யூ'வுக்கு அவருடைய புதல்வி வந்து விட்டதாகத் தெரிந்ததும் அவர் தமது அறையிலிருந்தபடியே ''லக்ஷ்மி!'' என்று கூப்பிட்டுக் கொண்டு கிளம்புவார். அப்போது அவருடைய நடை, ஓட்டமாகத்தான் இருக்கும். ''கன்றின் குரலைக் கேட்டுக் கனிந்து வரும் பசு''வின் ஞாபகம் பார்ப்பவர்களுக்கு வராமலிராது.

**- மூன்று மாதம் கடுங்காவல் - ரா. கி.**

## க. நா. சு. வின் தமிழாக்கம்

***இ**ந்தக் கதையில் தலைப்பையும் தமிழையும் தவிர மற்றதெல்லாம் யூஸேபியோ பிளாஸ்கோ (1844-1903) எனும் ஸ்பானிஷ் ஆசிரியருடையது.*

**- கொள்ளைக்காரன் என்ற சிறுகதைக்குத் தரப்பட்ட குட்டி முன்னுரை!**

## பெண்களை ஒதுக்க முடியாது

கோம்பூர்
4.10.41

ஐயா!

'கல்கி'யில் ஸ்திரீகளுக்குப் பிரத்யேக பகுதி இல்லாதது எனக்கு மிகக் குறையாயிருக்கிறது. அது ஒன்று சேர்க்கக்கூடாதா? 'கல்கி' தினே தினே வளர இறைவனை வேண்டும்,

ஆர். சுந்தரி

*(''கல்கி''யில் வரும் ஒவ்வொரு பகுதியும் ஸ்திரீகளுக்கும் உரியதுதான். ஸ்திரீகளுக்கென்று தனிப் பகுதி ஒதுக்கி அவர்களை அப்படித் தனியாக ஒதுக்கி வைக்க விரும்பவில்லை. மன்னிக்கவும். - ஆசிரியர்.)*

**- வட்டமேஜை**

# வேடிக்கையான முரண்பாடு

◆ சமையல் காஸ் சிலிண்டருக்கு ரூ. 500/- டெபாஸிட் கட்டுகிறோம். பெரும்பாலான வீடுகளில் இரண்டு, மூன்று சிலிண்டர்கள் கூட இருக்கின்றன. எனவே இந்த வகையில் ரூ. 1000/- ரூ. 1500/- முடக்கப்படுகிறது. இதற்குக் குறைந்த பட்சம் 3 சதம் வட்டி கொடுக்கலாம். வட்டியைப் பணமாகத் தர வேண்டிய அவசியம் கூட இல்லை. சிலிண்டர் சப்ளை செய்யும் போது அந்தத் தொகையைக் கழித்துக் கொள்ளலாம்.

திருப்பாதிரிப்புலியூர், எஸ். நாராயணன்.

◆ ''பாதிக் கிணறு தாண்டுவது பேராபத்து!'' - தலையங்கம் மூலம் பல ஆக்கப்பூர்வமான யோசனைகளை அரசுக்கு வழங்கியிருப்பது பாராட்டுக்குரியது. அதே போல் மாநிலங்களில் புதிதாகப் பதவி ஏற்கும் அரசியல் கட்சிகள் தங்கள் இஷ்டம் போல் இலவசத் திட்டங்களை அறிவிப்புச் செய்து விட்டு, அதனைத் தொடர்ந்து மத்திய அரசிடம் கையேந்தி நிதிகோருவதைத் தவிர்க்க வேண்டும்.

சென்னை - 23, சி. ராமதாஸ்.

◆ ராஜாஜி அவர்களின் தொழிற் கொள்கை ஏற்கப்பட்டதால், பாதிக் கிணறுதான் தாண்டப்பட்டிருக்கிறது என்ற 'நெகடிவ்' வாதத்திற்குப் பதிலாக, பாதி மலைப்பகுதி ஏறியாயிற்று; மீதியையும் ஏறுவதற்கு அரசுக்கு விவேகம் பிறக்கட்டும் என்ற 'பாஸிடிவ்' சிந்தனையுடன் தலையங்கம் அமைந்திருப்பின் இன்னும் சிறப்பாக இருந்திருக்கும் என்று எண்ணுகிறேன்.

ஈரோடு, சி. நாச்சிமுத்து.

◆ ''வட்டமேஜை''யில் எம். கதிஜா ஹனீபா எழுதிய கடிதம் கண்டேன். ''மதச்சார்பின்மையை ஏற்ற அரசின் முதல்வர் இந்துமதக் கோவில்களுக்கு நிதி வசூலிப்பது தவறு'' என்று கூறியிருக்கிறார். மற்ற மதக் கோவில் நிர்வாகங்களை எல்லாம் விட்டு விட்டு, இந்து மதக் கோவில் நிர்வாகங்களை மட்டுமே ஏற்று நடத்தும் அரசுக்கு, அக் கோவில்களைப் பராமரிக்கும் பொறுப்பு கிடையாதா? அதைத்தான் முதல்வர் செய்திருக்கிறார். மசூதிகளின் நிர்வாகம், அரசின் கையில் இல்லாத போது ஒரு முதல்வர் அவற்றிற்கு நிதி வசூலிக்க வேண்டிய அவசியம் என்ன?

திருச்சி - 21, கிஷோர்.

◆ 'தலைநகர் தலைகுனிகிறது' கட்டுரை படித்தேன். ஆசிரியைகள்தான் மோசம் என்றால், அந்தப் புகாரை விசாரிக்கும் பெண் போலீஸ் அதிகாரி, அவர்களையும் விஞ்சி விட்டார். இது பற்றி அவரைப் பேட்டி காண முயல, ''தில்லியில் எங்கோ ஒரு மூலையில் நடந்துள்ள சின்ன விஷயத்தைப் பத்திரிகைகளில் ஏன் பெரிதுபடுத்துகிறீர்கள்?'' என்று அவர் கூறியதிலிருந்து எந்த லட்சணத்தில் இப் பிரச்னை அணுகப்படுமோ என்ற துயரமே மேலிடுகிறது.

கோயம்புத்தூர், கே. ஆர். விஜயா.

◆ பஸ் டிக்கெட்டின் பின்புறங்களில் திருக்குறளை அச்சடிக்கலாம்! அனைவரும் தினம் ஒரு குறளையாவது படிக்கும் வாய்ப்புக்கிட்டும்! அத்துடன் ஓர் அதிகாரத்தின் கீழ்வரும் பத்துக் குறளையும் வரிசைப்படி கொண்டு வந்து டிப்போவில் கொடுத்தால் 'பரிசு' என அறிவிக்கலாம்! இதனால் டிக்கெட் இல்லாப் பயணம் குறையும். குறளையும் படித்தறிவர்.

மேல்பட்டி, எல். தமிழரசி.

◆ ''பொதுச் சொத்துக்களைச் சேதப்படுத்தும், தனிநபர்கள் - அரசியல் கட்சிகள் மற்றும் அமைப்புகள் மீது, சட்டபூர்வமான நடவடிக்கைகள் மேற்கொள்வதுடன், அதற்கான நஷ்டஈட்டையும் வசூல் செய்யும், ஆரோக்கியமான சட்டத் திருத்தம் கொண்டு வரப் போவதாக அறிவித்த முதல்வர் ஜெயலலிதா, மறுபுறம் ராஜீவ் படுகொலைச் சம்பவத்தின் போது, வன்முறையில் ஈடுபட்ட அ. தி. மு. க. - இ. காங்கிரஸ் தொண்டர்கள் மீதான வழக்குகளை, வாபஸ் பெற்றுக் கொண்டிருப்பது - வேடிக்கையான முரண்பாடாகும்!

வேலாயுதம்பாளையம், எம். சம்பத்.

◆ 'துவக்கப் பள்ளிகள்; அரசு ஆணை - ஆண்களுக்கு அநீதியா?' என்ற தலைப்பில் ஒரு பயனுள்ள விவாதத்தைத் துவக்கி வைத்த பெருமை கல்கியையே சாரும். கட்டுரையில் இருதரப்பு வாதமும் வைக்கப்பட்டுள்ளது.

துவக்கப் பள்ளியில் கல்வித்தரம் குறைந்துள்ள சூழ்நிலையில் பெண் ஆசிரியைகளின் நியமனம் மட்டும் இதைச் சரிசெய்து விட முடியாது. மேலும் எந்த ஒரு வேலையோ அல்லது அரசுப் பணியோ ஆண்களுக்கு மட்டும் என்றோ, பெண்களுக்கு மட்டும் என்றோ உட்படுத்துவது எவ்விதத்திலும் நியாயமாகாது. பெண் என்ற ஒரே காரணத்திற்காக அவர்களை ஒதுக்குவது எப்படி மிகத் தவறோ அதே போல, எல்லாவற்றையும் பெண்களுக்கு என்று அறிவிப்பதும் பெரும் தவறுதான்.

ஒன்று முதல் 5-ம் வகுப்பு வரை பெண்களே நியமனம் என்ற அரசு ஆணை ஆண்களுக்குப் பெரும் பாதிப்புதான். ஏற்கெனவே பணியில் இருப்பவர்கள், இன்னும் பணி கிடைக்காத ஆண் - ஆசிரியர்களின் கதி என்னாவது?

வி. சி. ஜெயமணி.
மாவட்டப் பொருளாளர்,
தமிழ்நாடு ஆரம்பப் பள்ளி ஆசிரியர் கூட்டணி,
தர்மபுரி மாவட்டம்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2344145; சர்க்குலேஷன் மானேஜர் : 2344190; விளம்பரம் - சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 150/- விமானத் தபால்: ரூ. 350/-.

